# “லஞ்ச ஊழல் நமது தேசியப் பண்பாகிவிட்டது!”



— கிரன் பேடி பேட்டி!

கிரன் பேடி என்று சொன்னதுமே சில ... மெய்சிலிர்ப்பும், வேறு சிலருக்கு மனக்கசப்பும் உ... ! ஒரு வழக்கறிஞர் விலங்கிடப்பட்டதையொட்டி ... வாதப் பிரதிவாதங்களுக்கு உள்ளானவர் கிரன் பேடி ... வழக்கறிஞர்களுக்கும் காவல்துறைக்கும் இடையே ஒரு பெரிய போராட்டமே நடந்து ஆர்ப்பாட்டம், நீதிமன்றப் புறக்கணிப்பு என்று தொடர்ந்து, இன்று விசாரணைக் கமிஷனில் வந்து நிற்கிறது. இங்கேயும், ‘சத்தியப் பிரமாணம் மேற்கொள்ள மாட்டேன்’ என்று கூறி, ஒரு புதிய பிரச்னையைத் தோற்றுவித்திருக்கிறார் கிரன் பேடி! இத்தகைய ஒரு சர்ச்சைக்குரிய நபரை வழக்கு தொடர்பான விஷயங்களை மட்டும் விலக்கிப் பேட்டி கண்ட போது......

**கேள்வி:** போலீஸ் துறையில் சேர வேண்டும் என்று ஏன் தீர்மானம் செய்தீர்கள்?

**பதில்:** எனக்குச் சிறு வயதிலிருந்தே சமூகத்திற்கு உபயோகமான ஒரு பணியில் இறங்க வேண்டும் என்ற ஆர்வம் இருந்தது. காவல் துறையில் மக்களுக்கு உடனடியாக உதவுவதற்கு வேண்டிய வாய்ப்புக்களும், அதிகாரமும் இணைந்து இருந்ததால் நான் இத்துறைக்கு ஈர்க்கப்பட்டேன்.

**கே:** உங்கள் பெற்றோர் ஆட்சேபிக்கவில்லையா?

**ப:** இல்லை. நான் இன்று இந்த நிலைமைக்கு வந்ததற்கு என் பெற்றோர்களுக்கு மிகவும் கடமைப்பட்டிருக்கிறேன். படிப்பு, விளையாட்டு என்று எல்லா விஷயங்களிலும் அக்கறை எடுத்துக் கொண்டு, வாழ்க்கையில் ஒரு குறிக்கோளுடன் நானும் எனது மூன்று சகோதரிகளும் முன்னேறுவதற்குச்

சதா எங்களை ஊக்குவித்தார்கள். நாங்கள் முன்னேறுவதற்காகப் பணம், நேரம், உழைப்பு என்று என் பெற்றோர்கள் நிறைய தியாகம் செய்திருக்கிறார்கள்.

கே: எடுத்த எடுப்பிலேயே போலீஸ் துறைக்கு வந்து விட்டீர்களா?

ப: இல்லை. பாலிடிக்ஸில் எம்.ஏ. பட்டம் பெற்ற பிறகு காவல் துறைக்கு வருவதற்கு முன்னால் சில மாதங்கள் அமிருதசரஸில் உள்ள கால்ஸா கல்லூரியில் விரிவுரையாளராகப் பணியாற்றினேன். படிப்பிலும் சரி விளையாட்டிலும் சரி, முதன்மை இடத்தையே பெற்றேன். தந்தை ஒரு சிறந்த டென்னிஸ் ஆட்டக்காரர். நானும் டென்னிஸில் ஜூனியர் சேம்பியன் ஷிப்பில் ஆரம்பித்து, 1972—ல் ஆசிய பெண்கள் கோப்பை, 1974—ல் தேசிய சேம்பியன் ஷிப் வரை பல பரிசுகளைப் பெற்றிருக்கிறேன்.

கே: உங்களுக்குச் சகோதரர் இல்லை என்ற குறை உண்டா? ஒரு வேளை சகோதரர் இல்லை என்ற காரணத்தினாலேயே காவல் துறை போன்ற ஒரு **'manly profession'** ஐத் தேர்ந்தெடுத்தீர்களோ?

ப: எனக்குச் சகோதரர் இல்லை என்ற நினைப்பே வந்தது கிடையாது. என் பெற்றோர்களுக்கும் தங்களுக்கு ஆண் குழந்தை இல்லையே என்ற குறை கிடையாது. அதனால், நான் காவல் துறைக்கு வந்ததற்கு அதை ஒரு காரணமாகச் சொல்ல முடியாது.

கே: உங்களைப் புகைப்படங்களிலும், நேரிலும் எப்பொழுதுமே போலீஸ் உடையிலோ அல்லது பேண்ட் போட்டுக் கொண்டோதான் பார்த்திருக்கிறோம். நீங்கள் புடைவை உடுத்துவது உண்டா?

ப: திருமணம் ஆன புதிதில், அதாவது காவல் துறையில் சேர்வதற்கு முன்பு சில சமயங்களில் புடைவை உடுத்தியது உண்டு. இப்பொழுதெல்லாம் புடைவை உடுத்துவதே கிடையாது. நான் எப்பொழுதுமே ஓடிக் கொண்டேதான் இருக்கிறேன். புடைவையுடன் இந்த ஓட்டம் முடியாது.

கே: உங்களுக்குச் சமையல் போன்ற வீட்டு வேலைகளில் ஆர்வம் உண்டா?

ப: சிறு வயதிலிருந்தே எனக்குச் சமையல் வேலையில் ஆர்வம் இருந்ததில்லை. என் தாயாரும் என்னை வீட்டு வேலைகள் செய்யச் சொன்னதில்லை. பெண்கள் வேறு கலைகளில் அல்லது தொழிலில் திறமைசாலியாக இருந்தால், அனாவசியமான வீட்டு வேலைகள் செய்வதில் தங்கள் பொன்னான நேரத்தை வீணாக்குவானேன்? கிடைக்கும் நேரத்தில் வேறு எவ்வளவோ வேலைகள் செய்யலாம்.

கே: உங்கள் திருமணத்தைப் பற்றி....

ப: எங்களுடைய திருமணம் டென்னிஸ் கோர்ட்டில் மலர்ந்த காதல் திருமணம். தற்சமயம் என் கணவர் அமிருதசரஸில் தம் தொழிலைக் கவனித்துக் கொண்டிருக்கிறார். எனக்குப் பன்னிரண்டு வயதில் ஒரு மகள் இருக்கிறாள்.

கே: உங்களுக்கும் உங்கள் கணவருக்கும் இடையே தகராறு என்று சமீபத்தில் வதந்தி கிளம்பியதே?

ப: அதெல்லாம் வீண் வதந்தி, எனக்கும் என் கணவருக்கும் இடையே எந்தவிதமான தகராறும் இல்லை. அநாவசியமாக எங்களைப் பற்றிப் புரளி கிளப்பி விடுகிறார்கள்.

கே: நீங்களும், உங்கள் கணவரும் வெவ்வேறு ஊர்களில் வாழ்வதைப் பற்றி உங்களுக்கு மனத்தாங்கல் இல்லையா? இருவரும் ஒரே இடத்தில் இருந்தால் (அவரவர் தொழிலைப் பாதிக்காதவாறு) எவ்வளவு நன்றாக இருக்கும் என்ற ஏக்கம் தோன்றுவதுண்டா?

ப: என்னுடைய பிரச்னைகளை, கவலைகளை, சந்தோஷங்களைப் பகிர்ந்து கொள்ள ஒரு துணை இல்லையே என்று தோன்றத்தான் செய்கிறது. என் கணவர் அமிருதசரஸில் தம் தொழிலில் மூழ்கி இருப்பதும், நான் இங்கு (தில்லியில்) என் உத்தியோகத்தில் ஒன்றிப் போய் இருப்பதும் மெச்சத்தக்கது என்று சொல்ல முடியாதது தான். ஆனால், என் கணவரால் எப்படித் தம் தொழிலை விட்டு விட்டு இங்கு வர முடியாதோ, அதே போல் என்னாலும் என் வேலையைத் துறந்து விட்டு அங்கு போக முடியாது. பொதுவாக, நம் நாட்டில் திருமணம் ஆன பிறகு மனைவிதான் தன் வேலையை, இலட்சியங்களை விட்டுக் கொடுக்க வேண்டும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. அப்படிப் பார்க்கையில் எங்கள் வாழ்க்கை சம்பிரதாயத்திலிருந்து மாறுபட்ட ஒன்று... இருவருமே தங்களுடைய வேலைகளை விட்டுக் கொடுக்காமல், அதே சமயத்தில் திருமணம் என்ற பந்தத்தில் கட்டுண்டு வாழ்கிறோம். மேலும், திருமணம் ஆகும் பொழுதே நான் ஐ.பி.எஸ். தேறி விட்டேன். அமிருதசரஸை விட்டு நான் வெளியே வேலைக்குப் போக வேண்டும் என்பது தெரிந்தேதான் என்னைத் திருமணம் செய்து கொண்டார் என் கணவர்.

கே: உங்கள் மகளுக்கு, தன் பெற்றோர்கள் சேர்ந்து வாழாததில் வருத்தம் உண்டா? உங்கள் மகள் இந்த ஏற்பாட்டை எப்படி எடுத்துக் கொண்டிருக்கிறாள்?

ப: குழந்தையிலிருந்தே அவளுக்கு இந்த ஏற்பாடு பழகிப் போய் விட்டது. அடிக்கடி அமிருதசரஸிற்குப் போய், தந்தையுடன் இருந்து விட்டு வருகிறாள். நானும் முடிந்த பொழுது என் மகளுடன் கணவரைப் பார்க்கப் போகிறேன். என் கணவரும் இங்கு அடிக்கடி வருவார்.

கே: நீங்கள் ஒரு டென்னிஸ் ஆட்டக்காரர் என்பதினால், இந்தியப் பெண்களின் டென்னிஸ் தரத்தைப் பற்றிய ஒரு கேள்வி. ஆண்களில் ராமநாதன் கிருஷ்ணன், விஜய் அமிர்தராஜ், ரமேஷ் கிருஷ்ணன் போன்றவர்கள் உலக அரங்கில் ஓர் இடத்தைப்

"எதுக்கு உங்க கதைக்கு 'வனத்தில் போட்ட கல்' னு பேர் வெச்சீங்க?"
"அப்போதாவது திரும்பி வராமல் இருக்குமான்னு ஒரு ஆசைதான்!"

பிடித்து, புகழ் அடைந்துள்ளார்கள். ஆனால் நமது பெண் ஆட்டக்காரர்களோ விம்பிள்டன், இத்தாலி, பிரான்ஸ் போன்ற அரங்குகளில் ஆடுவதற்கான தகுதியைக் கூடப் பெறவில்லையே? இதற்கு என்ன காரணம்?

ப: இதற்கு நான் All India Lawn Tennis Association-ஐத்தான் காரணமாகச் சொல்வேன். உலகப் பந்தயங்களில் ஆட வேண்டும் என்றால் விடாமல் முயற்சி செய்ய வேண்டும். ஒரு முறை தோற்று விட்டால், அடுத்த முறை யாரையும் விளையாடவே அனுப்பாமல் இருந்தால் தரம் எப்படி உயரும்? ஒவ்வொரு சர்வதேசப் பந்தயத்திலும் விளையாடிக் கொண்டேயிருந்தால்தான், கொஞ்சம் கொஞ்சமாக முன்னுக்கு வர முடியும். ஆனால் ALTA, பெண் ஆட்டக்காரர்கள் மீது முதலீடு செய்ய விரும்பவில்லை.

கே: இந்நாட்டின் முதல் பெண் ஐ.பி.எஸ். அதிகாரி என்பதால், உங்களுக்குக் கிடைத்த புகழும், விளம்பரமும், உங்களுக்கு உதவியாக இருந்தனவா, இல்லை தொந்தரவாக இருந்தனவா?

ப: (சிறிது யோசிக்கிறார்)... இரண்டும் தான். நிறைய பேருக்கு என்னைத் தெரிய வந்தது. நிறைய நண்பர்கள் கிடைத்தார்கள். அதே சமயத்தில் எனக்கு இவ்வளவு விளம்பரம் கிடைத்ததைப் பார்த்து, இவளுக்கு இவ்வளவு முக்கியத்துவம் எதற்கு என்றும் சிலர் மனம் புகைந்தார்கள். மேலும், நான் எதையேனும் சாதித்திருந்தால் அது என் தனி முயற்சியால் அல்ல — எனது சக ஊழியர்களின் ஒத்துழைப்பு மற்றும் எங்கள் கூட்டு முயற்சியால்தான். நான் செய்தவற்றை வேறு யார் செய்திருந்தாலும் அவர்களுக்கும் இதே அளவு விளம்பரம் கிடைத்திருக்குமே!

கே: நீங்கள் ஒரு பெண் என்பதால் காவல் துறையில் உத்தியோக ரீதியாக உங்களைப் பாரபட்சமாக நடத்தியதாக உங்களுக்கு எப்பொழுதாவது தோன்றியதுண்டா?

ப: கண்டிப்பாகக் கிடையாது. ஒரு வேளை எனக்குக் கொடுக்கப்பட்ட பணிகளை நான் சரிவரச் செய்யாமல் இருந்திருந்தால், எனக்கு அப்படி ஓர் எண்ணம் உண்டாகும்படி என்னை நடத்தியிருப்பார்களோ என்னவோ?

கே: உங்கள் கீழ் வேலை பார்க்கும் ஊழியர்கள் உங்களிடம் எப்படி நடந்து கொண்டார்கள்/கொள்கிறார்கள்? பொதுவாக ஆண்கள் ஒரு பெண் அதிகாரியின் கீழ் வேலை செய்ய விரும்புவதில்லையே?

ப: எனக்கு இந்த விஷயத்தில் பிரச்னை ஒன்றும் ஏற்பட்டதில்லை. ஆரோக்யமான, சுமுகமான ஒத்துழைப்பை எனக்கு அளிக்கிறார்கள். காவல் துறையைப் பொறுத்த வரையில், தங்களை வழிகாட்ட ஒரு தேர்ந்த, துணிச்சலான தலைவரையே அவர்கள் எதிர்பார்க்கிறார்கள். அந்தத் தலைவர் ஆணானாலும் சரி, பெண்மணியாக இருந்தாலும் சரியே.



கே: நீங்கள் ஒரு பெண்மணி என்பதால் உங்கள் பணியில் இக்கட்டான/சங்கடமான நிலைமை எப்பொழுதாவது ஏற்பட்டிருக்கிறதா?... சமீபத்தில் நடந்த சம்பவத்தைத் தவிர...?

ப: என்னுடைய பதினாறரையாண்டு காவல் துறை அனுபவத்தில், நான் ஒரு பெண்மணி என்பதால் எனக்கு எந்தவிதமான இக்கட்டான சூழ்நிலையும் ஏற்பட்டதே கிடையாது. முதல் முறையாக அப்படி ஒரு சங்கடம் சமீபத்தில் ஏற்பட்டது. தில்லி தீஸ் அஸாரி வக்கீல்கள் என் அலுவலகத்திற்கு முன்பு போராட்டம் செய்த பொழுது, என்னை முரட்டுத்தனமாகத் தாக்க வந்தார்கள். முதல் முறையாக என்னுடன் பணிபுரியும் சப் இன்ஸ்பெக்டர்களும், மற்றவர்களும் என்னை அறையை விட்டு வெளியே வர வேண்டாம் என்றும், வந்திருக்கும் வக்கீல்கள் கூட்டம் என்னைத் தாக்குவதற்குத் தயாராக இருக்கிறது என்றும் எச்சரித்தார்கள்.

கே: இப்படிப்பட்ட இக்கட்டான நிலைமைகளைச் சமாளிப்பதற்கு உங்களுக்கு எங்கிருந்து பலம் கிடைக்கிறது?

ப: அப்படிப்பட்ட நிலைமையே எனக்குப் பலத்தையும் கொடுத்து விடுகிறது! எந்த கஷ்டமான நிலைமையைச் சமாளிப்பதற்கும், நேர்மையான அணுகுமுறை, மனோதைரியம் ஆகியவை தேவை. மேலும், என் கீழ் பணியாற்றுவோர் எடுத்த முடிவு சரிதானா என்று சீர்தூக்கிப் பார்த்து, நியாயம் என்று எனக்குத் தோன்றினால் அவர்களுக்கு வேண்டிய பாதுகாப்பு அளிப்பது தானே என் கடமை. கடமையைச் சரிவர செய்தால் அந்தத் தார்மீக பலமே இக்கட்டுகளைச் சமாளிக்கத் துணை நிற்கிறது.

கே: நீங்கள் தில்லியில் போக்குவரத்து காவல் துறை கமிஷனராகப் பணியாற்றிய பொழுது, போக்குவரத்து விதிகளை மீறுவோருக்கு அவ்வப்பொழுது தண்டனை அளித்து, நிறுத்தக் கூடாத இடங்களில்

வாகனங்களை நிறுத்தினால் Crane வைத்து வாகனங்களை அகற்றி 'Crane Bedi' என்று பட்டப் பெயர் வாங்கும் அளவிற்கு மிகவும் திறமையாக உங்கள் கடமையைச் செய்தீர்கள். இப்படி நீங்கள் 'ரொம்ப' திறமையாகச் செயல்பட்டதே, உங்களைத் திடீரென்று தில்லியிலிருந்து கோவாவிற்கு மாற்றுவதற்குக் காரணமாக இருந்தது என்று பேசப்படுகிறதே? இது உண்மையா?

ப: எந்த ஒரு பதவியிலும் நேர்மை தவறாது நமது கடமையைத் திறம்பட ஆற்றும் பொழுது பலருடைய பாராட்டுதலைப் பெறுகிறோம்... அதே சமயத்தில், தவறு செய்பவர் எப்பேற்பட்டவராயிருந்தாலும் தவறான சலுகைகள் வழங்காமல், எல்லோருக்கும் ஒரே விதமான தண்டனையை வழங்கிய என்னுடைய செயல், சிலரைப் பாதித்திருக்கும். சட்டத்தை மீறிய போதும் தங்கள் முக்கியத்துவத்தால் தண்டனையிலிருந்து விதிவிலக்கு பெற்று வந்த சிலருக்கு எனது நடவடிக்கை பிடிக்காமல் போயிருக்கக் கூடும்.

கே: தற்பொழுது தாங்கள் போதைப் பொருட்கள் கட்டுப்பாட்டு பிரிவின் துணை இயக்குனராகப் பணியாற்றுகிறீர்கள். இந்த வேலையைப் பற்றிச் சிறிது விளக்கமாகச் சொல்ல முடியுமா?

ப: போதைப் பொருள்களின் உற்பத்தி, போக்குவரத்து, கடத்தல் சம்பந்தமான தகவல்கள் சேகரிப்பது, புலனாய்வு செய்வது எங்கள் வேலை. நான் இந்தப் பிரிவின் தலைமைச் செயலகத்தில் பணியாற்றுகிறேன். சென்னை, பம்பாய், கல்கத்தா, ராஜஸ்தான் போன்ற இடங்களிலுள்ள எங்கள் மண்டல அலுவலகங்கள் மூலம் நாங்கள் செயல்படுகிறோம். அரசாங்கத்தின் பல பிரிவுகளும் (வருவாய்த் துறை, சுங்கம், எல்லைப் பாதுகாப்பு) எங்களுடன் சம்பந்தப்பட்டிருப்பதனால், எல்லா பிரிவுகளின் பணிகளையும் ஒருமுகப்படுத்துவது எங்கள் பொறுப்பு. போதைப் பொருள் கடத்தல் இன்று உலகெங்கும் ஒரு பெரும் குற்றமாகக் கருதப்படுகிறது. அதனால் சம்பந்தப்பட்ட அயல்நாட்டு ஏஜன்சிகளுடனும் தொடர்பு வைத்துக் கொள்வது அவசியமாகிறது.

கே: போதைப் பொருள்களுக்கு அடிமையானவர்களை அதிலிருந்து மீட்பதற்காகப் பல சிகிச்சை நிலையங்களை (**De-addiction clinics**) தாங்கள் நடத்துவதாகக் கேள்விப்பட்டோம். இது உங்கள் உத்தியோகத்தைச் சேர்ந்த பணியா, அல்லது தனிப்பட்ட முறையில் இந்த கிளினிக்குகளை நடத்துகிறீர்களா?

ப: நான் வடக்கு தில்லியின் காவல் துறை டெபுடி கமிஷனராக இருந்த பொழுது என் அலுவலகக் கடமைகளின் வரம்பிற்குக் கொஞ்சம் வெளியே வந்துதான் ஆறு சிகிச்சை நிலையங்களை ஆரம்பித்தேன். போதைப் பொருள்களுக்கு அடிமையாகிக் குற்றவாளிகளாக ஆவதைத் தடுப்பதற்கும், அதே காரணத்தால் குற்றவாளிகளாக ஆனவர்களுக்கு மறுவாழ்வு அளிப்பதற்காகவும் இந்த நிலையங்களைத் துவங்கினேன். இவை எனக்குப் பெரும் வெற்றியைத் தந்தன என்றுதான் சொல்ல வேண்டும். வடக்கு தில்லி வட்டாரத்தில் குற்ற விகிதம் மளமளவென்று குறைய ஆரம்பித்தது. திருட்டுக் குற்றங்கள் ஐம்பது சதமாகக் குறைந்தன.

கே: தில்லியில் கொலைகள் ரொம்ப சகஜமாகப் போய் விட்டன! சராசரியில் மாதத்திற்கு ஒன்றிரண்டு கொலைகள் — அதுவும் குறிப்பாக வீட்டிற்குள் புகுந்து பெண்மணிகளைக் கொலை செய்து விட்டதாகச் செய்திகள் வெளிவருகின்றன. ஆனால் பெரும்பாலான கொலை வழக்குகளில் குற்றவாளிகள் பிடிபடுவதில்லையே?

ப: தில்லியில் கொலை விகிதம் அகில இந்தியச் சராசரியை விட அதிகமாக இல்லையே...

கே: உங்கள் புள்ளி விவரங்கள் என்ன சொல்கின்றனவோ தெரியாது. பொதுவாக, தில்லி போலீஸ், கொலை வழக்குகளைத் தீர்ப்பதில் போதிய அக்கறை எடுத்துக் கொள்வதில்லை என்றுதான் பரவலான அபிப்பிராயம் இருக்கிறது. கொலை நடந்த அன்று ஒரு பெரிய போலீஸ் படையே அமர்க்களமாக வருகிறது. அதற்குப் பிறகு அப்படியே கேஸை விட்டு விடுகிறார்கள். கொலை நடந்த குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் அக்கறை எடுத்துக் கொண்டு வழக்கைத் தொடர்ந்தால்தான் உண்டு.

ப: ஒவ்வொரு காவல் நிலையத்திற்கும் எத்தனையோ வேலைகள், வழக்குகள் இருக்கின்றன. அதனால் ஒரே கேஸை எவ்வளவு நாட்கள் கவனிக்க முடியும்?

கே: அப்படிச் சொல்ல முடியுமா? கொலை என்பது ரொம்பப் பயங்கரமான குற்றம் இல்லையா? குற்றவாளிகளைப் பிடிக்க வேண்டியது அவசியம் இல்லையா?

ப: உங்களுக்குத் தெரிந்த சில கொலை வழக்குகளில் குற்றவாளிகள் கண்டுபிடிக்கப் படாமல் போயிருக்கலாம். அதனால் எல்லா வழக்குகளையும் விட்டு விடுகிறார்கள் என்று சொல்ல முடியுமா? மேலும் சில கொலை வழக்குகள் ரொம்பக் கஷ்டமானவை. போதிய சாட்சிகள், தடயங்கள் கிடைக்காமலும் இருக்கலாமே?



கே: தில்லியில் சட்டம்—ஒழுங்கு குறைந்து கொண்டே வருகிறது. ஒரு காலத்தில் கோடைக் காலங்களில் இரவில் எல்லோருமே திறந்த வெளியில் உறங்கிக் கொண்டிருந்தார்கள். இப்பொழுது யாருமே வெளியே தைரியமாக உறங்குவதில்லை. மேலும் இரவு நேரங்களில் தெருவில் நடமாட்டமே இருப்பதில்லை. இதற்கெல்லாம் என்ன காரணங்கள்?

ப: இது ஒரு உலகளாவிய பிரச்னை. எல்லா தேசங்களிலும் சட்டம், ஒழுங்கு

# "சுவையுடன் வளர ராசிபலன் சொல்கிறது ஃபாரெக்ஸ்"




நீங்கள் ராசிபலனை நம்புகிறவர்களானால், கடகக் குழந்தையைப் பற்றிய சில குணங்களை அறிந்து கொள்ளுங்கள். தன் உணர்வுகளை எளிதில் வெளிக் காட்டும் இதன் முகபாவத்திலிருந்தே கடகக்குழந்தையின் இன்ப, துன்பத்தைத் தெரிந்து கொள்ளலாம். இதனால் உங்கள் எண்ணம் பெருமளவில் கடகக் குழந்தையுடன் பிணைந்திருக்கும். தன் மீது அன்பிருக்கிறதா என அறிய விரும்பும் கடகக் குழந்தையினை உங்கள் கணகாணிப்பில் கையாள்வது எளிது. தன்னை பாதுகாக்கும் திறனை நன்கு தெரிந்து கொண்டது கடகக்குழந்தை.

ராசிபலனை நம்பினாலும், நம்பாவிட்டாலும், குழந்தையின் போஷாக்கு என்றால் முழு நம்பிக்கைக்கும் பாத்திரமானது ஃபாரெக்ஸ்.

4-வது மாதம் முதல் உங்கள் கண்மணிக்குப் "பாலடங்கிய ஃபாரெக்ஸை" ஊட்டுங்கள். இது முழுமையான ஆடைப்பாலிலிருந்து தயாராவதால் குழந்தை நன்கு வளரத் தேவையான கால்ஷியம், தாது உப்புக்கள், புரதம், வைட்டமின்கள், கோதுமைத்தானியம் அனைத்தும் உள்ளடக்கியது.

6-வது மாதம் முதல் ஃபாரெக்ஸ்-வெஜ் ஊட்டுங்கள். இது ருசியுடன் கூடிய ஊட்டச் சத்துக்களடங்கியது.









**சுவையுடன் வளரும் வழி**

GX/49/213 TML

முதல் சாமியார்: நான் மூன்று பெண்களுக்குத் திருமணம் முடித்தேன். சாமியாராகி விட்டேன். நீங்கள்.....?

மற்றவர்: ஒரு குழந்தையை எல்.கே.ஜி.யில் சேர்த்தேன்.

— சுந்தர் சுந்தரி.



குறைந்து கொண்டு வருகிறது என்றுதான் சொல்ல வேண்டும். மேலும், தில்லியில் கடந்த நான்கைந்து ஆண்டுகளாக பஞ்சாப் பயங்கரவாதிகளின் நடவடிக்கைகள் காரணமாக இந்நிலைமை ஏற்பட்டிருக்கிறது.

கே: நீங்கள் பஞ்சாப் பயங்கரவாதிகளின் நடவடிக்கைகளைக் காரணமாகச் சொல்வீர்கள் என்று நான் எதிர்பார்த்தேன். நான், அதற்குச் சில ஆண்டுகளுக்கு முன்பிருந்தே நிலைமை மோசமாகி விட்டது என்று சொல்கிறேன்.

ப: இப்பொழுதெல்லாம் தில்லித் தெருக்களில் எத்தனை போலீஸ்காரர்கள் நின்று கொண்டிருக்கிறார்கள். அதனால் மக்கள் முன்னை விடத் தைரியமாக நடமாடுகிறார்களே!

கே: வக்கீல் அக்னிஹோத்திரியை ஒரு சப்-இன்ஸ்பெக்டர் கைவிலங்கிட்ட சம்பவம் சமீபத்தில் ஒரு கிளர்ச்சியை உண்டாக்கியது. பொதுவாக, ஒருவனைக் குற்றவாளி என்று சந்தேகப்பட்டுப் பிடிக்கும் பொழுது, அவனுக்குக் கை விலங்கு மாட்டுவதா இல்லையா என்பதை ஒரு போலீஸ் அதிகாரி எப்படி தீர்மானம் செய்வார்? அதற்கான வரைமுறை ஏதாவது உண்டா?

ப: குற்றவாளி தப்பிச் செல்வதற்காக என்ன வேண்டுமானாலும் செய்யத் துணிவான் என்று தோன்றினாலோ, அல்லது அவன் ஓடிப் போக வேறு வாய்ப்புக்கள் இருந்தாலோ கைவிலங்கிட்டுத்தான் காவல் நிலையத்திற்கு அழைத்துச் செல்லப்படுவான். உதாரணமாக, குற்றவாளியைப் பிடித்த உடன் அவனைக் காவல் நிலையத்திற்குக் கூட்டிச் செல்ல எங்கள் வாகனம் தயாராக இருந்தால் கைவிலங்கிட வேண்டிய அவசியமில்லை. பஸ் பிடித்துக் கொஞ்சம் தூரம் போக வேண்டும் என்றால் கைவிலங்கிட வேண்டியது அவசியமாகிறது. அதனால் சந்தர்ப்பத்திற்குத் தகுந்த மாதிரியும், எப்படிப்பட்ட குற்றவாளி என்பதைப் பொருத்தும், எது சரி என்று தோன்றுகிறதோ அதன்படி ஒரு போலீஸ் அதிகாரி நடந்து கொள்ளலாம்.

கே: நேர்மை தவறாத போலீஸ் அதிகாரி என்று உங்களைப் பற்றிய பொதுவான நல்ல அபிப்பிராயம் இருப்பது போல், காவல் துறை என்றாலே லஞ்சம் — ஊழலின் இருப்பிடம் என்ற கெட்ட அபிப்பிராயமும் மக்களிடையே நிலவுகிறது. இந்த அவப் பெயரை நீக்க, காவல் துறையைச் சேர்ந்தவர்களை எப்படி நேர்மையான வழிக்குக் கொண்டு வர முடியும் என்று நீங்கள் நினைக்கிறீர்கள்?

ப: லஞ்சம் — ஊழல் என்பது இப்பொழுது இந்நாட்டின் தேசிய பண்பாகிப் போய் விட்டது. காவல் துறையின் லஞ்ச ஊழலைப் பற்றி மட்டும் பேசிப் பயனில்லை. நேர்மை, நன்னடத்தை என்பதை எல்லாத் துறைகளிலும் கீழ்மட்டத்திலிருந்து புகுத்த வேண்டும் — தலைவன் ஒழுங்காக இருக்க வேண்டும். ஆனால் தலைவன் மட்டுமே ஒழுங்காக இருந்தால் போதாது. கிராமங்களிலிருந்து ஆரம்பித்து அரசியல்வாதிகள், அரசாங்க அதிகாரிகள் என்று எல்லோருமே நெறி தவறாமல் நடக்க வேண்டும். இப்போதே நேர்மை, கண்ணியம் என்று போதிக்க ஆரம்பித்தால் சுமார் இருபது ஆண்டு காலத்திற்குப் பிறகு ஒரு நேர்மையான, லஞ்ச ஊழலற்ற சமுதாயத்தை உருவாக்கலாம்.

கே: நீங்கள் ஏதோ பகற் கனவு காண்பது போல் எனக்குத் தோன்றுகிறது!

ப: எனக்கு அப்படித் தோன்றவில்லை. நம்மால் சாதிக்க முடியும். ஒருவரால் மட்டுமே இதைச் செய்ய முடியாது; நேர்மை தவறாமல், நியாயமான பாதையில் மக்களை வழி நடத்திச் செல்ல ஒரு சிறு குழுவினர் அயராமல் பாடுபட்டால் கூடப் போதும். நம்மால் அப்படிப்பட்ட ஒரு சமுதாயத்தை உருவாக்க முடியும்.

கே: சமீபத்தில் அமிருதசரஸ் பொற்கோவிலில் எடுக்கப்பட்ட நடவடிக்கைகளைப் பற்றி உங்கள் அபிப்பிராயம் என்ன?

ப: அது ஒரு நல்ல கூட்டு முயற்சி. அரசாங்க அதிகாரிகள், காவல் துறை, பாதுகாப்புத் துறை எல்லோரும் மிகவும் திறமையாகச் செயல்பட்டு, பொற்கோவிலிலுள்ள பயங்கரவாதிகளைச் சரணடையச் செய்தது பெரிய சாதனைதான். அவர்கள் எல்லோரையும் பாராட்டத்தான் வேண்டும்.

பேட்டி: ரமாமணி சுந்தர்

புகைப்படங்கள்: செந்தில் ஆர். கணேஷ்.

தேர்தல் நெருங்க நெருங்க, எங்கே தி. மு. க. வெற்றி பெற்று விடுமோ என்ற பயம் பலரை ஆட்கொண்டு வருகிறது. அதிலும் காங்கிரஸ் தனித்துப் போட்டி யிடுவது என்று தீர்மானித்தால் தி. மு. க. வுக்கு வெற்றி வாய்ப்புக்கள் அதிகரிக்கும் என்பதைப் புரிந்து கொள்ளப் பிரமாதமான அரசியல் அறிவு தேவையில்லை. எனவே தான் ஜுரம் கண்டு பலர் பிதற்ற ஆரம்பித்து விட்டனர்.

ஜானகி அணியினரும் ஜெயலலிதா அணியினரும் ஒருவரை ஒருவர் வசை பாடிக் கொள்வது மிகுதியாக இருந்த போதிலும், தி. மு. க. மீதும் ஜெயலலிதா தாக்குதலைத் திசை திருப்பித் தீவிரப்படுத்தியிருப்பதற்கு இந்தக் காய்ச்சலே காரணம். அதனால்தான் 'கருணாநிதியின் இடுப்பை முறிப்பேன்' என்றும், 'அவர் இருந்த இடம் தெரியாமல் செய்து விடுவேன்' என்றும் தனி நபர் தாக்குதலில் இறங்கியிருக்கிறார் ஜெ. நேரடித் தாக்குதல் ஒருபுறமிருக்க, கோயபெல் தந்திரங்களைக் கையாண்டு வதந்திகளைப் பரப்பித் தி. மு. க. உட்பூசல்களால் பிளவு படப் போகிறது என்ற மாயையை உருவாக்கவும் தீவிர முயற்சி நடக்கிறது. இந்த மாயை, மக்களை ஏமாற்றுவதுடன், கட்சிக்குள் மெய்யாலுமே பிளவை உண்டாக்க உதவலாம் என்றும் நம்பப்படுகிறது. 'பொய்யையே திரும்பத் திரும்பக் கூறிக் கொண்டிருந்தால் மெய்யாகி விடும்' என்பது போலத்தான் இதுவும்! இந்தக் கோயபெல் பிரசாரங்களைத் தாங்கி, எதிர் நீச்சல் போட்டு, தி. மு. க. கரையேறுமா அல்லது வெள்ளத்தில் அடித்துக் கொண்டு போகப்படுமா என்பதை ஆராயும் போது, பொய்ப் பிரசார அலைகளை எதிர்த்து நிற்கும் பலம் தி. மு. க. வுக்கு இருப்பதாகவே கணிக்க முடிகிறது.

உதாரணமாகக் கலைஞர், ஸ்டாலினைத் தமது வாரிசாக்க முயலுகிறார் என்றும், இது அன்பழகனுக்குப் பிடிக்கவில்லை என்றும், இது காரணமாக தி. மு. க. வில் பிளவு ஏற்படுவது உறுதி என்றும் பேசப்படுகிறது. இதற்கு ஆதாரமாக, 'வை. கோபால்சாமி போன்றவர்கள் எதிர்காலத்தில் தி. மு. க. வுக்குத் தலைமை ஏற்று நடத்துவார்கள்' என்று ஒரு கூட்டத்தில் அன்பழகன் பேசியதை, 'ஸ்டாலின் விரோதப் பேச்சு' என்பதாக முத்திரை குத்துகிறார்கள்.

வை. கோபால்சாமியின் நாடாளுமன்றப் பேச்சுக்கள் அடங்கிய நூல் வெளியீட்டு விழாவில், வை. கோபால்சாமி போன்ற அனுபவம் மிக்க ஒருவரைப் பற்றி, அன்பழகன் இப்படிப் பேசாமல் வேறு எப்படிப் பேச முடியும்? இது ஸ்டாலின் எதிர்ப்புப் பேச்சாக ஏன் கருதப்பட வேண்டும்? ஸ்டாலின் போன்ற இளைய தலைமுறையினருக்கு எழுச்சியூட்டும் பேச்சாக எடுத்துக் கொள்ளக் கூடாதா?

ஸ்டாலினைக் கருணாநிதி தமது வாரிசாக்க முயல்கிறார் என்பதற்கு ஆதாரமில்லை என்பது ஒருபுறமிருக்க, அவர் அதற்கு முயன்றாலும் கூட ஸ்டாலி



# தி.மு.க.வில் பிளவா?





னுக்குத் தகுதி இல்லையென்றால் வாரிசாக முடியாது! தகுதி இருந்தாலோ, கருணாநிதியே முயன்றாலும் தடுத்து நிறுத்த முடியாது! ஏனெனில் கழகத் தலைவர், பொருளாளர், செயலாளர் பொறுப்புக்களுக்கு உரியவர்களைப் பொதுக் குழு தேர்ந்தெடுக்கிறது. பொதுக் குழுவினரோ, ஒன்றியம், நகரம், மாவட்டம் ஆகியவற்றின் நிர்வாகிகள் தேர்தலையொட்டித் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். பெரும்பான்மை இசைவின்றி ஒருவரைத் திணிப்பது என்பது அ. தி. மு. க., காங்கிரஸ் கட்சிகளில் தான் சாத்தியம். தி. மு. க. வில் அது நடக்காத காரியம்.

தி. மு. க. வில் எப்படியாவது ஒரு பிளவை உண்டாக்கிவிட ஆசைப்படுகிறவர்கள், வெகு சாமர்த்தியமாக 1969 — இல் அன்பழகன் பேசியதைக் கூட இருபதாண்டுகளுக்குப் பிறகு எடுத்து விடுகிறார்கள்! 'கலைஞரை நான் தலைவராக ஏற்றுக் கொண்டால், என் மனைவி கூட என்னை மதிக்க மாட்டாள்!' என்று அன்பழகன் அன்று சொன்னாராம்! எந்தச் சூழ்நிலையில் எந்த அர்த்தத்தில் சொன்னார் என்பதை மறைத்துக் கதை திரிக்கிறார்கள்! அண்ணாவைத் தலைவராகவும் கலைஞரைத் தோழராகவுமே அதுவரை பார்த்து வந்தவர் அன்பழகன். அண்ணாவின் மறைவுக்குப் பின், கலைஞர் சட்டமன்றத்தின் கட்சித் தலைவராக ஏற்கப்பட்டிருக்கிறார். அந்தத் தருணத்தில் அதற்காகக் கலைஞரைப் பாராட்டிவிட்டு, புதிய தலைவருக்குக் கட்டுப்பட்டு நடப்பதே கழகத்தினரின் கடமை என்பதை வலியுறுத்திய பிறகு, அன்பழகன் கூறுகிறார்: "அண்ணாவைத் தலைவராக ஏற்றுக் கொண்ட எனக்குக் கலைஞரைத் தலைவராக ஏற்க இயலவில்லை; ஆயினும் தளபதியாக ஏற்றுச் செயல்படுவேன்!" ஆக, இது தி. மு. க.வுக்குள் இருக்கிற ஒரு கருத்துச் சுதந்திரத்தையும் அதே நேரத்தில் கட்டுக் கோப்பையும்தான் கட்டிக் காட்டுமேயொழிய, கலைஞருக்கும் அன்பழகனுக்கும் இருபதாண்டுகளுக்கு மேலாக இருந்து வரும் காழ்ப்புணர்ச்சியை அல்ல. கலைஞரின் செயல்பாடு கண்டு நாளடைவில் அவரைத் தலைவராக ஏற்கவும் அன்பழகன் தயாராகி விட்டார் என்பதுதான் உண்மை. இல்லையெனில் காழ்ப்புணர்ச்சிப் புண் என்றோ புரையோடிப் போய் ஆபரேஷன் சிகிச்சை தேவைப்பட்டிருக்கும்!

தி. மு. க. வின் கொள்கைகள் அனைத்தையும் நாம் ஏற்கிறோமோ இல்லையோ, அதற்கு வோட்டுப் போடுகிறோமோ இல்லையோ, அவை வேறு விஷயங்கள். ஆனால் இன்றைக்கு உள்ள கட்சிகளில் உட்கட்சி ஜனநாயகத்தை நன்கு வளர்த்துள்ள ஒரே கட்சி, கட்சிக்குள் கருத்து மாறுபாடுகளை அனுமதிப்பது மட்டுமின்றி சகித்துக் கொள்ளவும் பழகியுள்ள ஒரு கட்சி, கருத்து மாறுபாடுகளைப் பேசித் தீர்த்துக் கொண்டு பிறகு கட்டுப்பாட்டுடன் நிற்பதில் உறுதியாக உள்ள ஒரே கட்சி தி. மு. க. தான்.

அதைக் கண்டு பயப்படுகிறவர்கள், ஸி. ஐ. ஏ. பணம் தி. மு. க. வுக்கு வந்து குவிவதாகப் புரளி பண்ணும்போது, தங்களைத் தாங்களே மக்களின் மதிப்பில் தாழ்த்திக் கொள்கிறார்கள்.

— லம்பாதி

புகைப்படம்: சுபா



# நில நடுக்கம்..!

**சமீபத்தில் மதுரை மாவட்டத்தில் தேனி, உத்தமபாளையம், கம்பம் பகுதிகளிலும், கேரளாவில் இடுக்கி மாவட்டத்திலும் பல முறை நில நடுக்கம் ஏற்பட்டது. மக்கள் பயந்து போய் வீட்டைவிட்டு வெளியேறினர். பூகம்பம் அல்லது நில நடுக்கம் பற்றி இங்கே கூறுபவர் புவியியல் நிபுணரான பி. எஸ். ராவ்.**

ஆற்றும் ஆறுகளும் மேட்டு நிலங்களையும் குன்றுகளையும் கொஞ்சம் கொஞ்சமாக உடைத்து அடிவாரங்களில் வண்டல்களைச் சேர்க்கின்றன. பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளில் இந்த வண்டல் படிவங்கள் ஒன்றின் மீது ஒன்றாகப் படியும் போது கீழேயுள்ள படிவங்கள் அழுத்தப்பட்டு, அழுத்தம் தாங்க முடியாமல் வெடிக்கின்றன. இப்படிப் பூமியினுள் அசைவுகள் உண்டாகும்போது பூகம்பம் அல்லது நில நடுக்கம் உண்டாகிறது.

பலமான பூகம்பத்தில் பூமியின் மேல் பரப்பில் சேதங்கள் அதிகம் உண்டாகும். அப்போது பலவிதமான ஓசைகள் எழும்; கண்ணைப் பறிக்கும் வெளிச்சம் பிறக்கும். நீர் ஊற்றுக்கள் வற்றிப் போவதும் வற்றிய நீர் ஊற்றுக்களில் நீர் சுரப்பதும் சகஜம்.

இந்தியாவைப் பொறுத்தமட்டில் விந்திய மலைக்குத் தெற்கே இருக்கும் பூமியமைப்பு மிகவும் உறுதியான தன்மை வாய்ந்தது. இருபத்தைந்து கோடி வருடங்களுக்கு முன்னர் தோன்றியிருக்க வேண்டும் என்று கணக்கிடப்பட்டிருக்கிறது. வடபகுதியில், குறிப்பாக மலைகளும் ஆறுகளும் நிறைந்த வடகிழக்குப் பகுதியில் பூமி ஸ்திரமாக இல்லை. அதனால் அஸ்ஸாம் பகுதியில் அடிக்கடி நில நடுக்கம் ஏற்படுகிறது. நில நடுக்கத்தின் அளவைக் கண்டுபிடிக்கக் கருவிகள் பல இடங்களில் வைக்கப்பட்டுள்ளன. ஆனால் பூகம்பம் எப்போது வரும் என்று சொல்லவோ, அதைத் தடுக்கும் முறைகளோ இன்னும் கண்டுபிடிக்கப்படவில்லை. இந்த விஷயங்கள் இன்னும் ஆராய்ச்சி நிலையிலேயே இருக்கின்றன.

சமீப காலமாக வானத்தில் பலவித ஆராய்ச்சிகள் செய்யப்படுவதால், பூமியில் சில மாறுபாடுகளை உண்டாக்கும் சக்தி சுற்றுப்புற கிரகங்களுக்கு உண்டென்றும், ஆகவே கிரகங்களின் அமைப்பைக் கவனித்துப் பூமியில் ஓரிடத்தில் எப்போது நில நடுக்கம் ஏற்படும் என்று சொல்ல முடியும் என்றும் கருதப்படுகிறது. ஆனால் இதையும் உறுதியாக ஏற்பதற்கில்லை. 1980–இல் ஏழு கிரகங்கள் ஒரே நேர்க்கோட்டில் வந்தபோது இந்தியாவின் வடகிழக்கில் கடுமையான பூகம்பம் வரும் என்று கருதப்பட்டது. அப்போது எதுவும் நடக்கவில்லை.

எறும்புகள், விலங்குகளின் நடத்தையில் வித்தியாசம் ஏதாவது இருந்தால், நிலநடுக்கம் வருவதற்கு ஓர் அறிகுறியாகக் கொள்ளலாம். அவைகளுக்குப் பூமியின் மிக லேசான மாறுதல்களைக் கூட உணர்வதற்கு முடியும் என்று ஓர் ஆராய்ச்சி தெரிவிக்கிறது.

நிலநடுக்கத்தைக் கணக்கிடும் போது அது எவ்வளவு வேகமாகவும், எத்தனை கி. மீட்டர் பரப்பளவிலும் பாதித்திருக்கிறது என்பதைக் கணக்கிட வேண்டும். இவற்றைக் கணிக்க ஆறு நிலைகள் இருக்கின்றன. சமீபத்தில் மதுரையிலும், இடுக்கியிலும் தோன்றிய நிலநடுக்கத்தின் அளவு 2.8 ஆகும். தென்னிந்தியாவில் சாதாரணமாக மூன்று நிலைகளுக்கு மேல் நில அதிர்வு உண்டாவதில்லை. அதனால் பெரிய பாதிப்புகள் ஏற்படுவதில்லை.

— கௌசல்யா

# ஒரு கனவு நனவாகிறது!

ஒரு பைலட். அதுதான் அவன் எப்போதும் ஆக விரும்பியது. ஒரு குழந்தையாக இருந்தபோதே அவனது பேச்செல்லாம் அதுபற்றித்தான் இருக்கும்.

அவன் பெரியவனாக வலுவுடன் வளர ஹார்லிக்ஸில் உள்ள ஊட்டச்சத்து உதவும் என்று டாக்டர் சொன்னதால், ஒரு நாளைக்கு இரு முறை ஹார்லிக்ஸ் குடி என்று நான் அவனிடம் சொன்னதுண்டு.

இப்போது அதெல்லாம் உண்மையாகவே நடந்துவிட்டது. ஒரு நாளைக்கு இரண்டு வேளை ஹார்லிக்ஸ் குடிக்கும் பழக்கத்தை அவனுக்கு ஏற்படுத்தியது குறித்து நான் மகிழ்ச்சி அடைகிறேன். இத்தனை ஆண்டுகளிலும் அது அவனுக்கு உறுதுணையாக இருந்து வந்துள்ளது!



வளரும் குழந்தைகளுக்கு நலமளிப்பது.

ஹார்லிக்ஸ் பசியைத் தூண்டும் பானம். அதில், வளரும் குழந்தைகளின் நல்ல ஆரோக்கியத்திற்கும், முழுமையான வளர்ச்சிக்கும் வேண்டிய புரதம், வைட்டமின்கள், தாதுப்பொருட்கள், மாவுச்சத்து —ஆகிய முக்கிய இயற்கை ஊட்டச்சத்துக்கள் நிறைய உள்ளன.

டாக்டர்கள் உலகெங்கும் ஹார்லிக்ஸை சிபாரிசு செய்வதில் வியப்பில்லை. இது குடும்பம் முழுவதற்குமே ஊட்டச்சத்து அளிக்கும் மூலாதாரமான பானம் என்று நிரூபிக்கப்பட்டது.







சிறந்த ஊட்டச்சத்துமிக்க பானம்

HTA 5820 T



வெற்றி
ஐ.ம.சு
தேர்தல் திணைக்களம்
இ.காங்கிரஸ்
மதத்தின் பெயரால் மதியீனம்




புலி பசித்தால் புல்லைத் தின்னும்!
புதுமொழி
விடுதலைப் புலிகள்
சமாதான முயற்சிகள்




சட்ட மன்றத் தேர்தல் நடத்துக!
மா நகராட்சித் தேர்தல் நடத்துக!
தேர்தலாவது வெங்காயமாவது!



# கல்கி

1988 ஜூன் 26
மலர் 46 இதழ் 48
விபவ ஆனி 12



## தேர்தலைத் தாமதிக்காதே! ஜனநாயகத்தை அவமதிக்காதே!

தேர்தல் கமிஷன் சுதந்திரமாக இயங்கவில்லை' என்று கருணாநிதி கூறியதாகச் சில வாரங்களுக்குமுன் செய்தி வெளியானது. சுதந்திரமாக இயங்கவில்லை என்று கூறுவதைவிட, தேர்தல் கமிஷன் சுதந்திரமாக இயங்க முடியாத சூழ்நிலை படிப்படியாக உருவாகி வருவதாகக் கூறுவது பொருத்தமாக இருக்கும். 'தமிழகத் தேர்தலைத் தள்ளிப் போடாதீர்கள்; சீக்கிரம் நடத்துங்கள்' என்று கோரிப் பல்வேறு கட்சிகள் ஆர்ப்பாட்டம் செய்ய வேண்டிய அவசியம் ஏற்பட்டிருப்பதே இதனை மெய்ப்பிக்கும்.

மக்கள் என்னவோ ஆளுனர் ஆட்சியே நீடிக்க வேண்டும் என்று விரும்புவது போல் சில பத்திரிகைகளைப் படித்துப் பார்த்தால் தோன்றும். ஆனால் இது தவறான கணிப்பு மட்டுமல்ல; ஜனநாயக மரபுகளுக்கு முரணானது. ஒரு சில வாசகர் கடிதங்களையும் ஓரிரு பத்திரிகைத் தலையங்கங்களையும் வைத்து ஒரு முடிவுக்கு வரக் கூடாது. எந்த ஆட்சியுமே ஆரம்பத்தில் மக்களின் நன்மதிப்பைப் பெறுகிற மாதிரிதான் நடந்து கொள்ளும். போகப் போகத்தான் அதன் சுயரூபம் தெரிய வரும். அரசியல்வாதிகளின் அலட்சியத்தைவிட அதிகாரிகளின் கொடுமை மக்களால் தாங்க முடியாததாகப் போகக் கூடும். லஞ்ச ஊழலும் நாளாவட்டத்தில் தலைவிரித்து ஆடத்தான் செய்யும். சென்னை மாநகராட்சியில் ஸ்பெஷல் ஆபீஸர் நியமிக்கப்பட்டு எல்லா அதிகாரங்களும் அதிகார வர்க்கத்தின் கரங்களுக்கு வந்து சேர்ந்த போது, 'அப்பாடா!' என்று நிம்மதிப் பெருமூச்சு விட்டவர்கள் பலர். அவர்களையே இன்று கேட்டுப் பாருங்கள். கௌன்சிலர்கள் இல்லாத குறையை நன்கு உணர்வதாக ஒரு குரல் அழுவார்கள்! ஆளும் கட்சியும் எதிர்க்கட்சியும் ஏறத்தாழ சமபலத்தில் இருக்கும் போதுதான் ஜனநாயகம் சிறப்பாகச் செயல்படும். அந்தச் சூழ்நிலையில்தான் அதிகார துஷ்பிரயோகம், லஞ்ச ஊழல் முதலியன குறைந்தபட்சமாக இருக்கும். எனவே தேர்தலை ஒத்திப் போடலாம்; ஆளுனர் ஆட்சியே நீடிக்கலாம் என்று எண்ணுவதும் எழுதுவதும் ஜனநாயகத்தின் தன்மையை உணராத, அதிகார வர்க்கத்தின் ஆணவம் எப்படி வேகமாக வளரக் கூடும் என்பது புரியாத குறுகிய நோக்கு.

இன்னொன்றையும் கவனிக்க வேண்டும். எம். ஜி. ஆர். மறைந்தபின் கடந்த சில மாதங்களாகக் கட்சிப் பிரசாரங்கள் எந்த அளவுக்குத் தரம் தாழ்ந்து போயிருக்கின்றன என்பது யாவரும் அறிந்ததே. இந்த நிலையை இன்னும் பல மாதங்களுக்கு நீடிக்கச் செய்யத்தான் வேண்டுமா? மக்களின் செவிகள் ஒலிபெருக்கிகளின் ஓலங்களை இன்னும் எத்தனை காலம் தாங்க வேண்டும்? நினைத்துப் பார்க்கவே அசிங்கமான வார்த்தைப் பிரயோகங்களைக் கேட்டுக் கேட்டு மக்களின் மனங்களில் இன்னும் எத்தனை காலம் அழுக்குச் சேர வேண்டும்? கருத்து மாறுபாடு, அபிப்பிராயப் பரிமாற்றம் என்றால் சரி; ஆனால் இங்கே பகைமை உணர்வல்லவா வளர்க்கப்படுகிறது! அது இன்னும் எத்தனை மாதங்களுக்குக் கத்தி தீட்டிக் கூர் பார்க்க வேண்டும்? தேர்தலைத் தாமதிக்காமல் நடத்தி முடிக்க இந்த ஒரு காரணமே கூடப் போதும்!

தமிழகத்தில் தேர்தல் தள்ளிப் போடப்படுமானால் அது உண்மையில் பெரும்பான்மை மக்களின் விருப்பத்தையொட்டி நடக்கிற காரியமாக இராது. ஒப்புக்கு அதை ஒரு காரணமாகக் காட்டி ஏமாற்றப் பார்க்கலாமேயொழிய, நிஜமான காரணம் மத்தியில் ஆளும் காங்கிரஸ் கட்சியின் சுயநலமாகத்தான் இருக்கும். மக்களிடையே தங்கள் செல்வாக்கை அதிகரித்துக் கொள்ள (குறிப்பாகத் தனித்துப் போட்டியிடுவதானால்) இன்னும் கொஞ்சம் அவகாசம் பெறுவது நல்லது என்று அவர்கள் கருதலாம். ஆனால் இது ஜனநாயகப் பண்பல்ல என்பதுடன் வீண் பழியையும் பரிகாசத்தையும் காங்கிரஸ் சுமக்க நேரிடும்.

குறிப்பிட்ட காலக்கெடுவுக்குள் தேர்தலை நடத்த வேண்டும் என்று சட்டம் சொல்கிறது. தேர்தலை நடத்தும் பொறுப்பைச் சுதந்திர அமைப்பான தேர்தல் கமிஷன் ஏற்கிறது. ஆனால் மத்திய அரசைக் கலந்து ஆலோசித்துத்தான் அது தேதியை அறிவிக்க வேண்டும். தேர்தல் நடத்த முடியாதபடி சட்ட ஒழுங்குப் பிரச்னை நிலவுமானால், அந்நியர் படையெடுப்பு போன்ற பேரபாயம் ஏதேனும் இருக்குமானால், தேர்தலைத் தள்ளிப் போடுமாறு தேர்தல் கமிஷனை மத்திய அரசு கேட்டுக் கொள்ளலாம். ஆனால் அப்படிப்பட்ட அஞ்சத்தக்க பிரச்னை ஏதும் இல்லாத போது தேர்தல் கமிஷன், தேர்தலை ஒத்தி வைக்க மறுத்து, தனது சுதந்திரத் தன்மையையும், பாரபட்சமற்ற போக்கையும், ஜனநாயக உணர்வையும் நிலைநாட்ட வேண்டும்.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.





# ரயிலுக்கு நேரமாச்சு



பெரிய பண்ணையார் வினுசக்ரவர்த்தி கோயில் சொத்தைச் சுரண்டோ சுரண்டு என்று சுரண்டிக் கொண்டிருக்கப் புதிதாகக் கோவிலுக்கு வரும் நிர்வாக அதிகாரி பாண்டியனிடம் மாட்டிக் கொண்டு திரு திரு என்று விழித்து விட்டு, பணத்தால் பாண்டியனைச் சரிக்கட்டப் பார்த்து, முடியாமல் கடைசியில் பாண்டியன் செய்த புகாரின் பேரில் கைது செய்யப்பட்டு 'உள்ளே' போகிறார்.

உடன் வெளியே வருகிறார். பாண்டியனைத் தீர்த்துக்கட்ட ஆட்களை ஏவிக் காரியத்தை முடிக்கிறார். பாண்டியனின் காதலி மாதுரியைப் பாழ் பண்ணுகிறார். மச்சினி நிஷாந்தியின் மேல் ஒரு கண் வைக்கிறார். அவளை இரண்டாம் கல்யாணம் செய்ய முடிவெடுக்கையில் அவள் இரயிலுக்குக் காத்திருக்கும் கூட்டத்தில் கலந்து ராமராஜனைக் காதலித்து, நடந்த கதையெல்லாம் சொல்லி, கடைசியில் வினுசக்ரவர்த்தியால் மறுபடி இடையூறுகள் வர, மாதுரியின் கையால் வினுவின் கணக்குத் தீர்க்கப்பட, ராமராஜன் நிஷாந்தி ஜோடி ஒன்று சேர, சுபம். அச்சு அசலாக அப்படியே ஒரு பழக்கப்பட்ட மசாலா தடவப்பட்ட கிராமத்துச் சினிமாக் கதை.

டைரக்டருடைய சாமர்த்தியம் என்னவென்றால் இரண்டு காதல் கதைகளை ஒன்றாகக் கோத்திருப்பதுதான்.

படத்தில் நினைவில் நிற்பவர் மாதுரிதான். அவரை இவ்வளவு அழகாக யாரும் திரையில் காட்டியதில்லை. அவரும் இவ்வளவு அழகாக எதிலும் நடித்ததாக நினைவில்லை. ஒட்டிக் கொள்கிறார் — நம் மனத்தில்.

ராமராஜன் இந்தப் படத்தில் வழக்கத்திற்குச் சற்று மாறாக — ஏகப்பட்ட சண்டைக் காட்சிகளில் பங்கெடுத்துக் கொண்டிருக்கிறாரா? தியேட்டரை விட்டு வந்த பின்பும் கூட அந்த டிஷ் யூங் டிஷ் யூங் இன்னும் காதில் ஒலித்துக் கொண்டே ஏஏஏஏ இருக்கிறது.

நிஷாந்தி ஜொலிக்கிறார் — மேக்கப் காரணமாக.

வினுசக்ரவர்த்தி வில்லனாகப் போட்டால் வில்லன், காமெடியனாகப் போட்டால் காமெடியன், குணச்சித்திர நடிகராக வேஷம் கட்டினால் குணச்சித்திர நடிகர் என்று சந்தேகத்திற்கு இடமின்றி நினைக்க வைத்து விடுகிறார். இந்தப் படத்தில் வில்லன். கொடுத்த வேலையைக் கொஞ்சம் சுத்தமாகக் கச்சிதமாகச் செய்திருக்கிறார்.

வி. கே. ராமசாமி — காந்திமதி இருவரின் நடிப்பைப் பார்த்து ரொம்ப நாளாகி விட்டதே என்று நிமிர்ந்து உட்கார்ந்தால் அவர்கள் இருவரை மட்டும் பார்க்க முடிகிறது. நடிப்பு? ப்ச்.....

இரண்டு பாடல்கள் முணுமுணுக்க வைக்கின்றன. அப்படியே அவற்றில் ஏதோ பழைய பாடல்களின் வாசனையும் அடிக்கிறது.

இந்த ரயில் செண்டிமெண்ட் சினிமாக்காரர்களைப் பாரதி ராஜாவின் ஆரம்ப நாட்களில் பிடித்துக் கொண்டது. இன்னும் மாறவில்லை.

அதுதான் முன்னாலேயே சொல்லி விட்டோமே — டிபிகல் கிராமத்து சினிமாக் கதை என்று!

— ஜெயமன்மதன்





# நினைவலைகள் முடியட்டும்...

புதுவை சந்திரஹரி

ஹரி கயிற்றுக் கட்டிலில் கிடந்தபடியே மோட்டு வளையை வெறித்துக் கொண்டிருந்தான். அவன் கண்கள் சிவந்து கலங்கியிருந்தன. அறையில் எரிந்து கொண்டிருந்த டங்ஸ்டன் பல்பு சூரிய வெளிச்சத்தின் பிரவேசத்தினால் கொஞ்சம் கொஞ்சமாகத் தன் ஒளியை இழந்து கொண்டிருந்தது.

இரவு கடந்து பகலாகி விட்டது என்ற உணர்வு தோன்றியும் அவன் அப்படியே கிடந்தான். மார்பில் அவன் கவிழ்த்துப் போட்டுக் கொண்டிருந்த அந்தத் திருமணப் பத்திரிகையை மறுபடியும் நிமிர்த்தினான்.

'மணமகள் திவ்யா. மணமகன் சக்கரவர்த்தி'

இந்நேரம் திருத்தணி முருகன் சன்னதியில் திவ்யாவை அலங்கரித்துக் கொண்டிருப்பார்கள்.....

அவளின் நினைவுகள் 'அலை அலையாகத் தோன்றின.

"ஹரி, இண்டர்வியூ போனீங்களே, என்னாச்சு?"

"எனக்கு நம்பிக்கையில்லேப்பா."

"ம்... முதல்லே நம்பிக்கையை வளர்த்துக்குங்க."

"நம்பிக்கை வளர்ந்து செடியாகி, மரமாகிப் பட்டுடுத்து திவ்யா. ஒண்ணா--ரெண்டா? எத்தனை அடெண்ட் பண்ணிட்டேன். இந் நேரம் பிளாட்பாரத்துலே பக்கோடா வித்திண்டிருந்தாலும் வாழ்க்கையிலே செட்டில் ஆகியிருக்கலாம்!"

"இது மாதிரி பேசறதை நிறுத்துங்க. இங்கே பாருங்க. உங்களுக்காக இந்த பேப்பர் கட்டிங் கொண்டு வந்தேன். உங்க குவாலிபிகேஷனுககுப் பொருத்தமா இருக்கு."

"சரி, உன் ஆசையைக் கெடுப்பானேன். கொண்டா!"

"நீங்க வேணும்னா பாருங்க. இந்த வேலை நிச்சயம் உங்களுக்குக் கிடைக்கும்."

"உன்னை விட மேலானது எனக்குக் கிடைக்கக் கூடியது எதுவுமே இல்லே திவ்யா... ஏய்... என்ன அழறே?"

"ஒண்ணுமில்லே...."

"நீ ரொம்ப மென்மையா இருக்கே திவ்யா. இது கூடாது."

"பின்னே, பொறுப்பில்லாமல் பேசினா? நீங்க உங்க படிப்புக்கு ஏத்த நல்ல வேலையிலே சேருவீங்க, உங்களை அப்பாகிட்டே அறிமுகப்படுத்தணும்னு நெனச்சுக்கிட்டிருக்கேன். நீங்க என்னடான்னா.... ஹரி! என்னோட காலேஜ் படிப்பும் முடிஞ்சுடுச்சு. இனிமேல் தாமதிக்கிறது ஆபத்து ஹரி."

"திவ்யா... எனக்குத் தெரியாதா? உங்கிட்டே சொல்ல வேண்டாம்னு பார்த்தேன். நேத்து ஹோட்டல் சோழாவிலே பேரர் செலக்ஷனுக்குக் கூடப் போயிட்டு வந்தேன் திவ்யா... அனுபவம் இல்லேன்னுட்டாங்க."

"ஹரி...."

இந்நேரம் மாப்பிள்ளை மணவறையில் உட்கார்ந்திருப்பான். அய்யர் ஹோமம் வளர்த்து மந்திரங்களை உச்சரித்துக் கொண்டிருப்பார். திவ்யாவை மெல்ல மணமேடைக்கு அழைத்து வந்திருப்பார்கள்.

திவ்யா... எப்படி நீ தாங்குவாய்? எப்படியெல்லாம் உன்னை நீயே தேற்றிக் கொண்டாயோ?... ஐயோ.... நீ சொன்னதை நான் மறுபரிசிலனை செய்திருக்க வேண்டுமோ?

அருகிலிருந்த ஸ்டூலைப் பார்த்தான் ஹரி. நான்கு நாட்களுக்கு முன் இதில்தான் உட்கார்ந்து பேசினாள் திவ்யா. அவள் முகமெல்லாம் சோகம்:

"என்ன ஹரி, பேசாமல் இருக்கீங்க?"

"ஓடிப் போகணும்னா கூட பெங்களூர் வரை போறதுக்கு இரண்டு டிக்கெட்டுக்குப் பணமில்லே திவ்யா."

"என் உடம்பிலே சில நகைகள் இருக்கு."

"எத்தனை நாளைக்கு? ஒரு வாரமா? ஒரு மாசமா? ஒரு வருஷமா? சூன்யமா இருக்கே திவ்யா. ஓடணும்னா என்னைக்கோ செய்திருக்கலாமே. அதுவா நம்மோட லட்சியம்?"

"அப்போ?"

"நாம பதினாறுலேயும் பதினெட்டுலேயும் இல்லே திவ்யா. ரொம்பவே படிச்சிட்டோம். இல்லேன்னா ஓடிப் போய்க் கையிலே இருக்கிற காசு தீர்ந்ததும் சுலபமா அருவியிலே விழுந்திடலாம்."

"ஏதாவது செய்தாகணும் ஹரி. நம்ம திட்டம் என்ன? உங்களுக்கு ஒரு வேலை கிடைச்ச கையோட நான் வீட்டுக்கு அழைச்சிட்டுப் போக வேண்டியது. அப்பா ஜாதி குலம்னு ஏதும் பேசினார்னா அந்த நிமிஷமே வெளியேறிக் கல்யாணம் செய்துக்கணும்னு தானே?"

"ஆனால் இந்த நிமிஷம் வரை எனக்கு ஒரு வேலை இல்லையே திவ்யா! எப்படி நம்ம திட்டம் நிறைவேறும்...? அடுத்த வேளைக்கே நான் நண்பர்கள் தயவைத் தானே எதிர்பார்த்திட்டிருக்கேன்."

"இப்ப என்ன செய்யணும்னு பேசுங்க ஹரி."

"திவ்யா! நான் யோசிச்சு முடிச்சுட்டேன். நீ உன் மனசைத் திடப்படுத்திக்க வேண்டிய நேரம் இது. உன்னோட அப்பா எல்லா விதத்திலேயும் என்னை விடச் சிறந்த ஒருத்தரை உனக்கு ஏற்பாடு செய்திருக்கார். இந்தக் கல்யாணம் நடந்தா இன்னும் சில நாள்லே அவரோட அமெரிக்காவிலே செட்டில் ஆகப் போறே. கையிலே பத்திரிகையோட எம் முன்னாலே நிற்கிற உன்னோட வாழ்க்கை, என்னால கெடக் கூடாது திவ்யா."

"என்ன ஹரி பேசறீங்க? உங்களை... உங்களை மறந்து நான் எப்படி... எப்படி ஹரி.... உங்களாலே முடியுமா?"

"முடியும். காதல் மட்டுமே வாழ்க்கை இல்லை திவ்யா. அது வாழ்க்கையோட ஒரு பகுதிதான். நம்மோட சந்திப்புகள் கௌரவமா இருந்தது. நம்மோட அன்பு தூய்மையானதாக இருந்தது. அது பாலுணர்ச்சிகளாலே கொச்சைப்படுத்தப் படலே. அப்படியே கௌரவமா முடியட்டும் திவ்யா."

"ஏன் இப்படி உங்களை நீங்களே ஏமாத்திக்கிறீங்க....? என்னை விட இளகிய மனசு உங்களது. காலம் பூரா கண்ணீர் விட்டுக்கிட்டிருப்பீங்க"

"ஆமா, தாடி வளர்த்து பைஜாமா மாட்டிக்கப் போறேன். ஹஹ்ஹ... ஹ்ஹ... ஹஹ்ஹ... ஹா"

"எப்படிச் சிரிக்க முடியறது?"

"பின்னே. நாம சராசரி இல்லே திவ்யா. அதுக்கும் மேலே. முயற்சி செய்தோம். முடியலே. எது புத்திசாலித்தனம்? வாழ்க்கையை அழிச்சுக்கிறதா இல்லை...? சரி. உனக்கு நேரமாச்சு. கிளம்பு"

"..........."

"ரொம்ப நாழியாறது திவ்யா"

"........."

"இப்படியே உட்கார்ந்திருந்தா...?"

"அப்ப அதான் உங்க முடிவா?"

"ஆமா!"

**அ**வள் சொன்னது நிஜம்தான். அவளை விட இளகியவன் தானோ நான்? இன்னும் எத்தனை நாட்கள் அழுது கொண்டிருக்கப் போகிறேன்?... முடியவில்லையே.. திருமணத்திற்குச் சென்று அவளை இறுதியாகப் பார்த்தாவது இருந்திருக்கலாமோ!

ஐயோ... உடைந்து போய் விடுவாளே!

பக்கத்து மணிக் கூண்டு 'டாண்' 'டாண்' என்று ஓசையை எழுப்பி மணி ஒன்பது என்றது.

முகூர்த்தம் ஏழரை—ஒன்பது. இந்நேரம் திவ்யா கழுத்தில் தாலி ஏறியிருக்கும்.

கதவு தட்டப்படும் ஓசை கேட்டு, எழுந்து சென்று திறந்தான் ஹரி.

கீழே இருக்கும் கடைப் பையன் நின்றிருந்தான்.

"ஸார், உங்களுக்குத் தபால். முதலாளி கொடுத்து வரச் சொன்னார்."

"அதுக்குள்ளயா போஸ்ட் வந்துவிட்டது?"

"இல்லே ஸார். இது கடையிலே கிடந்தது. தலைவர் இறந்ததுக்கு எல்லாம் ரெண்டு நாள் கடையடைச்சுட்டாங்களா, இப்ப திறந்தப்பதான் பார்த்தோம்."

வாங்கிப் பிரித்தான். அதில் —

காரைக்குடி கல்லூரியிலிருந்து அவனை டெமான்ஸ்ட்ரேட்டராக நியமனம் செய்திருக்கும் ஆர்டர் இருந்தது.

'திவ்யா' — உதடுகள் அவள் பெயரை உச்சரிக்க, கண்களில் நீர் திரண்டு, அவன் மனம் வலிக்க ஆரம்பித்தது. ஒரு சராசரி மனிதனாகி, உடைந்து போனான்!

## தொடர் தொடர்கிறது!

பட்டாபிஷேகத்துடன் ராமாயணத் தொடரை தூர்தர்ஷன் முடித்து விடத் தயாராக இல்லையாம்! லவ-குசா கதை நாலு வார இடைவெளியில் ஆரம்பமாகி விடும் என்று கருதப்படுகிறது. காரணம் ராமாயணத் தொடர் அடைந்துள்ள வெற்றிதான். எட்டு கோடி மக்கள் இத் தொடரைப் பார்ப்பதாக ஒரு கணக்குக் கூறுகிறது. இதையொட்டி வரும் விளம்பரங்களால் தூர்தர்ஷனுக்கு இதுவரை கிடைத்துள்ள வருமானம் நாலரை கோடி ரூபாய்க்கும் அதிகம்!

— அ. குமார்.

# வெறும் பாசத்தினால் மட்டுமே இவர்களின் மருத்துவக் கட்டணங்களை செலுத்த முடியாது

## மெடிக்ளெய்ம் உதவியால் செலுத்த முடியும்

ஆம், மெடிக்ளெய்ம்—ஒரு ஹாஸ்பிடலைசேஷன் மற்றும் டொமிசிலியரி ஹாஸ்பிடலைசேஷன் பெனிஃபிட் பாலிஸி, இது உங்கள் குடும்பத்தினர்க்கு ஒரு வரப்பிரசாதம்.

நீங்கள் எத்தனை அன்பு செலுத்தினாலும் சரி... உங்கள் கம்பெனி எத்தனை மருத்துவத் திட்டம் வழங்கினாலும் சரி... அவை உங்களுக்கு ஏற்படும் பெரிய நோய்கள், அறுவை சிகிச்சைகள், விபத்துகள் போன்றவைகளுக்குத் தேவைப்படும் மருத்துவ பராமரிப்புக்கு ஆகும் கட்டணங்களை செலுத்திவிட முடியாது.

ஆகவே உங்களுக்குத் தேவை மெடிக்ளெய்ம்.

உங்களுடைய தேவைகளுக்கு ஏற்ப - பலரக மருத்துவ வசதிகளை வழங்குகிறது மெடிக்ளெய்ம்.

வீட்டில் இருந்து கொண்டே மருத்துவமனையில் பெறும் சிகிச்சை வசதிகளுக்கும் கூட பாதுகாப்பளிக்கிறது.

இத்திட்டத்தின் கீழ் குடும்பத்தினர் அனைவருக்கும் பாதுகாப்பு செய்து கொண்டால், பிரிமியத்தில் தள்ளுபடியும், வரிவிலக்கும் கிடைக்கும்.

பாசத்தின் பிரதிபலிப்பாக உங்கள் குடும்பத்தினர்களுக்கு மெடிக்ளெய்ம் திட்டத்தின் கீழ் பாதுகாப்பு செய்து கொள்ளுங்கள்.

இதற்கு ஆகும் செலவோ மிகச் சொற்பம், உங்களுக்கு இதன் மூலம் கிட்டும் பலனோ மிக்க அதிகம்.

இத்திட்டம் உங்கள்பால் மிக்க அக்கறை காட்டுகிறது.

| ஆண்டொன்றுக்கு பிரிமியம் ரூ. | ஹாஸ்பிடலைசேஷன் ரூ. | டொமிசிலியரி ஹாஸ்பிடலைசேஷன் ரூ. |
|---|---|---|
| 200 | 10,500 | 3,100 |
| 250 | 17,600 | — |
| 350 | 25,500 | — |
| 600* | 37,750 | 5,250 |
| 840* | 52,750 | 7,400 |
| 1300* | 82,500 | 11,500 |

வயது வரம்பு: 5-70 ஆண்டுகள்

* கூடுதல் பிரிமியம் செலுத்துவதின் பேரில் பர்சனல் ஆக்ஸிடென்ட் காப்பு கிடைக்கும்.

**MED+CLAIM**

மெடிக்ளெய்ம் வழங்குவோர் நியூ இந்தியா அஷ்யூரன்ஸ்

**NEW INDIA ASSURANCE**



A subsidiary of the General Insurance Corpn. of India

எந்த விபத்திற்கும் நாங்கள் பாதுகாப்பு அளிக்கிறோம்!

CONTOUR ADS-NIA-278E/87

# கீழ்படாத காலமும் நரைதொடாத இயற்கையும்

தமிழன்பன்

* வஞ்சகம்
அறியாத இயற்கையில் நான்
எத்தனை
வசீகரம்!

மனிதனை
வசனமாக எழுதிவிட்டு
இயற்கையை இப்படிக்
கவிதையாகப்
புனைந்தவர் யார்?

வாயாடிப் பிள்ளைகளான
வார்த்தைகளை
உறங்க வைத்துவிட்டு
மவுனத்தின்
மடியில் நான்
மல்லாந்து கிடக்கிறேன்.
ஓ!
என் கண்முன்
அழகின் கனவுகள்
பவனி போகின்றன!

* நேற்று,
இன்று நாளை என்று
கிழிபடாத காலம்,
நரை தொடாத இயற்கையின் கையில்
ஒரு
கிலுகிலுப்பையாகக்
குலுங்குகிறது!

என்
வயதுகளை உரித்து
எறிந்து விட்டு,

பால்யத் தொட்டிலில், நான்

விரல் சூப்பிக் கிடக்கிறேன்!

அடடா! என்ன பரவசம்!

* படுத்துக் கொண்டே
கடல்,
கண்ணாடி பார்க்கிறதோ?

நீலம்
என்னுள் நிரம்ப
நான்
நீலத்துள் நிரம்புகிறேன்!

* வந்து போன
வசந்தத்தைத் தேடும்
மரத்திற்குக்
கூந்தல் முடியக் கூட
நேரம் இல்லையோ?

விட்டுப்
பிரிந்த பறவைகளைப் பற்றி
விண்ணை விசாரிக்கிறதோ?

இந்த
மரத்தின் வேர்வளர
ஈரம்
இன்னும் வேண்டுமெனில்
என்
எழுத்துக்களை நான்
பிழிந்து தரத் தயார்!

* காற்று,
கப்பல் கொண்டுவரப்
போயிருக்கிறதோ?
கப்பல் நிரம்ப — இந்த
இளைய
மரச்சிக்கு
மலர் கொண்டுவரப்
போயிருக்கிறதோ?
மூச்சுவிட மறந்து
காற்று,
எங்கே என்ன செய்கிறது?

* உயரங்களையே
தியானிக்கும் — இந்த
மலையைச் சுமப்பது
தரைக்கு
எப்போதும் பெருமை தான்!

ஒல்லி
ஓடையே — ஒரு
வெள்ளி நாக்காகிப் பேசுவது —
அந்தப்
பெருமையைத் தவிர
வேறு என்ன?

* எவரும்
காண முடியாதபடி
இந்தச் சரிவில் — நான்
தொலைந்து போக மாட்டேனா?
என்னைத்
தேடிவருவோரும் — இங்கே
என்னைப் போலவே
தொலைந்து போக மாட்டார்களா?

வண்ணப்படம்:

கே. வி. ஆனந்த்.

## இவர்தான் முதல்வர்:

# இளைய காமராஜர்!

கடந்த இருபது ஆண்டுகளாகத் தமிழகத்தை ஆண்ட திராவிட கட்சிகளின் ஆட்சி மக்களுக்குத் திருப்தி அளிக்கவில்லை. எனவே தமிழகத்தில் மீண்டும் பொதுநல நோக்குடன் ஆட்சி நடத்திட பெருந்தலைவரிடம் அரசியல் அனுபவ பாடங்களைக் கற்றவரான இலக்கியச் செல்வர் குமரி அனந்தனைத் தமிழகத்தின் முதல்வராக்க வேண்டும்.

1967—ல் காங்கிரஸ் தோல்வியுற்ற பொழுதும் மனந்துவளாது மக்களைச் சந்தித்து காங்கிரஸ் கொள்கைகளை விளக்கக் கன்னியாகுமரியிலிருந்து சென்னை வரை பாதயாத்திரை செய்தது குமரி அனந்தனின் செயல் திறமைக்குச் சான்றாகிறது.

குமரி அனந்தன் பாராளுமன்ற உறுப்பினராகவும், சட்டமன்ற உறுப்பினராகவும் இருந்த போது அவர் ஆற்றிய பணிகள் போற்றுதலுக்குரியன. அவர் பாராளுமன்றக் கேள்வி நேரத்தில் மாநில மொழிகளில் பேசும் வாய்ப்பில்லாததை அறிந்தார். இந்நிலையில் ஆங்கிலமும், இந்தியும் தெரியாத பாராளுமன்ற உறுப்பினர் தமது கடமையைச் செய்வதற்கு வாய்ப்பே இல்லை. எனவே அவர் இப் பிரச்னைக்குத் தனிமனிதனாக நின்றே தீர்வுகாண முனைந்தார். அவரது விடா முயற்சியின் பலனாக மைய அரசு ஜகஜீவன்ராம் தலைமையில் ஒரு குழுவை அமைத்தது. இப் பிரச்னையைத் தமிழக மக்களுக்குச் சுற்றுப்பயணத்தின் மூலம் விளக்கி மக்களின் ஆதரவை அனந்தன் பெற்றார். மாணவர் சக்தியை உரிய முறையில் பயன்படுத்தி இலட்சத்திற்கு மேற்பட்ட மாணவர்களிடம் ஆதரவுக் கையெழுத்தைப் பெற்று ஜகஜீவன்ராமிடம் அளித்தார். இறுதியில் ஜகஜீவன்ராம் தமிழ் உள்ளிட்ட அனைத்து மாநில மொழிகளிலும் பாராளுமன்றத்தில் வினா எழுப்பும் உரிமையை அளித்தார்.

பணவிடைத்தாள், வங்கி காசோலை பாரங்கள் முதலியன இருமொழியில் இருந்தால் போதாது எனக் கருதி மும்மொழியில் வெளியிடப் போராடி வெற்றி கண்டவர் குமரி அனந்தனே.

ஓட்டல்களில் சாப்பிடுவதற்கு ரூபாய்க்கு நான்கு பைசா விதம் வரியாக வசூல் செய்யப்பட்டதை எதிர்த்து, நீக்கும்படி செய்தது குமரி அனந்தனே.

பத்தாம் வகுப்பு தவறிய மாணவர்கள் டுடோரியலில் படிப்பதற்குச் செலவிடும் தொகை "இலவசக் கல்வி முறையை'ப் பயனற்றதாக்கிவிடும் என்பதால், அம்மாணவர்களுக்கு இலவசப் பயிற்சி வகுப்பை ஏற்படுத்த வேண்டியதன் அவசியத்தை அரசுக்கு உணர்த்தியவர் குமரி அனந்தனே.

கட்டளைக் கால்வாய் திட்டம் சென்னைக் குடிநீர் பிரச்னையைத் தீர்க்கப் பயனளிக்காது எனக் கூறி, அத்திட்டத்தைக் கைவிடச் செய்தவரும் குமரி அனந்தனே.

டவுன் பஸ் இப்பொழுது 30 கி. மீ. வரை ஓடுவதற்குக் காரணம் குமரி அனந்தனே.

விவசாயத்திற்கு இலவச மின்சாரம் அளிப்பதன் மூலம் உணவு தானிய உற்பத்தியைப் பெருக்குவதற்கு வாய்ப்பாகும் என அரசுக்கு ஆலோசனை வழங்கி, சிறு விவசாயிகளுக்கு மின் கட்டண விலக்கையும், ஏனைய விவசாயிகளுக்கு மின் கட்டணச் சலுகையையும் பெற்றுத் தந்தவர் குமரி அனந்தன்தான்.

குமரி அனந்தன் நதிகளைத் தேசியமயமாக்க வேண்டியதன் அவசியத்தை மீண்டும் நினைவூட்டி, செயலாற்றுவதற்கான வழிமுறைகளை விரிவாக ஆராய்ந்து தெளிவாக விளக்கியுள்ளார். அக்கோரிக்கை இப்பொழுது பலராலும் வலியுறுத்தப்படுவதற்குக் குமரி அனந்தனே காரணமாக விளங்குகிறார்.

இவ்வாறு சிறப்பான பணிகளை ஆற்றிய குமரி அனந்தனின் அரசியலில், சிலரின் சூழ்ச்சி காரணமாகச் சில தடுமாற்றங்கள் ஏற்பட்டபோதிலும் தடம் மாறாத பயணத்தைத் தொடர்பவர் அவர். எந்தவொரு பிரச்னையையும் தீர்வு காணும் வரை தொடர்ந்து வலியுறுத்துவதும், தீர்வுகாணச் சரியான அணுகுமுறையைத் தருவதும் குமரி அனந்தனின் தனித்தன்மையாகும். இளைய காமராஜராகிய குமரி அனந்தன் முதல்வரானால் "காமராஜ் கால ஆட்சியை" மக்களுக்கு மீண்டும் அளிப்பார் என்பதில் என் முனையளவும் ஐயமில்லை.

'தமிழக மக்களுக்கு வசந்த காலம் மலர வேண்டும்'.

— எம். நடராஜ், விழுப்புரம்.



புகைப்படம்: கூபா.

# பரவசமான பழனி குடமுழுக்கு





அக்னி நட்சத்திரத்தின் உக்கிரத்தைத் தாள முடியாமல் ஊட்டி, கொடைக்கானல், சிம்லா, என்று பல மலைவாசஸ்தலங்களைத் தேடிச் செல்கிறார்கள் வசதி படைத்தவர்கள். ஆனால் அக்னி நட்சத்திரத்தையே ஒரு விழாவாக எண்ணிக் கொண்டாடி, அந்த நாட்களில் முருகனைத் தரிசனம் செய்ய ஆயிரக்கணக்கான பக்தர்கள் திரண்டு வரும் காட்சியைப் பழனியில் காண்கிறோம். பழனி ஆண்டவனும் 'பக்தர்களுக்கு நான் சளைத்தவனா' என்று அக்னி நட்சத்திரம் முடியும் தினத்தில் குன்றிலிருந்து இறங்கி வந்து பக்தர்களுக்குக் காட்சியளிக்கிறார்!

நாங்கள் பழனி சென்ற போது அக்னி நட்சத்திரத் திருவிழா முடிவுற்றிருந்தது. ஆனால் தமிழ்ஞானத் திருத்தலம் விழாக் கோலம் மாறாமலே காட்சியளித்தது. முடி இறக்கிக் காணிக்கை செலுத்தும் பக்தர்கள் ஒருபுறம், குழந்தைகளுக்குக்காது குத்திக் கலன் அணியச் செய்யும் பக்தர்கள் கூட்டம் மறுபுறம், 'அரோகரா' 'ஆறுமுகா' என்று

மெய்மறந்து கூவியபடி காவடி தூக்கி வரும் அடியார்கள் மற்றும் ஒருபுறம்... பிஞ்சுக் குழந்தைகள் காவடி தூக்கி வருவதைப் பார்க்கையில் பால முருகனே பிரத்யட்சமாகி விட்டாற் போல் தோன்றுகிறது. கூடவே காவடி தூக்கும் மரபு ஏற்படக் காரணமாக அமைந்த புராணக் கதையும் நினைவுக்கு வருகிறது:

சூரபத்மனின் படைகளுக்குப் பயிற்சியளித்து வந்த இடும்பன், முருகப் பெருமான் சூரனை சம்ஹாரம் செய்த பிறகு மிகவும் விரக்தி அடைந்தான். அவன் அகத்திய முனிவரிடம் சென்று தன் மனத்துயரை வெளியிட்ட போது, வடக்கே உள்ள சிவகிரி, சக்தி கிரி என்ற மலைகளைத் தெற்கே தூக்கிக் கொண்டு வந்து வைத்தால் நன்மை உண்டாகும் என்று அவனுக்கு ஆறுதல் கூறினார்.

உடனே புறப்பட்டான் இடும்பன். அவன் சிவகிரி சக்தி கிரியை அடைந்த போது, ஆகாய மார்க்கமாக ஒரு பிரும்ம தண்டமும் பல பாம்புகளும் வந்தன. இடும்பன் பாம்புகளைக் கொண்டு மலைகளைப் பிணைத்துப் பிரும்ம தண்டத்தின் இரு பக்கங்களிலும் தராசு போல் கட்டித் தொங்க விட்டான். அகத்தியர் உபதேசித்த பிரணவ மந்திரத்தினை உச்சரிக்கவும் மலைகள் அவன் சக்திக்குக் கட்டுப்பட்டன. அவற்றைத் தூக்கிக் கொண்டு இடும்பன் தெற்கே வந்தான். வழி தவறி, திசை மாறிய போது, காவிரி நதிக் கரையில் முருகப் பெருமானே வந்து வழிகாட்டினார்.

திருவாவினன்குடி என்ற ஊரை இடும்பன் அடைந்த போது, பசியும் தாகமும் மேலுறக் குன்றுகளைக் கீழே வைத்தான். இளைப்பாறி விட்டு மீண்டும் அவற்றைத் தூக்க முயன்ற போது தோள்கள் முறிந்தன. குன்றுகளை அசைக்க முடியவில்லை! மலைச் சிகரத்தில் ஏறிப் பார்த்தான் இடும்பன். அங்கே குறமரத்தின் அடியில் ஒரு குழந்தை கையில் தண்டம் ஏந்தி, அவனைப் பார்த்துச் சிரித்தது.

“நீ யாரடா?” என்றான் இடும்பன்.

“அசுரனே! நீ கொண்டு வந்த இந்த மலை என்னுடையது. நீ யார் இதைத் தூக்க...?” என்று குழந்தை பதிலுக்குக் கேட்டதும் அதனைத் தாக்க முற்பட்டான் இடும்பன். குழந்தை முருகன் தன் தண்டாயுதத்தைப் பிரயோகிக்க, அடிபட்டு விழுந்தான் இடும்பன்.

இடும்பன் மனைவி இடும்பி முருகப் பெருமானைச் சரணடைந்து மாங்கல்யப் பிச்சை கேட்டாள். வரங்களை அள்ளித் தரும் வள்ளல், இடும்பனுக்குப் பிரத்யட்சமாகி மீண்டும் வாழ்வளித்ததோடு, அவனைத் தன் வாயில் காப்போன் ஆக்கிக் கொண்டார். மற்றொரு வரமும் அளித்தார் — ‘சிவ சுவரூபமான சிவகிரியையும் சக்தி சுவரூபமான சக்தி கிரியையும் இடும்பன் தூக்கி வந்து, முருகப் பெருமானின் அருளைப் பெற்றதன் நினைவாக, காவடி தூக்கி வரும் அன்பர்கள் எல்லோருக்கும் கேட்ட வரம் கிடைக்கும்’ என்ற வரமே அது.

இடும்பன் தன் அகந்தையை விட்டொழித்ததைப் போல் நாமும் அகந்தையைத் துறந்து முருகன் அடிபணிகிறோம் என்பதற்கு ஓர் அடையாளச் சடங்காகவே காவடி எடுக்கும் மரபு ஏற்பட்டுள்ளது.

**கா**வடி தூக்கி வந்த பக்தர்கள் பிராகாரத்தைச் சுற்றி நிழலுள்ள இடங்களில் இளைப்பாறிக் கொண்டிருக்கிறார்கள். ஆயிரக்கணக்கான பக்தர்கள் தினமும் வந்து போகும் ஆலயம் துப்புரவாகவே இருக்கிறது. மல்லிகையும், பன்னீரும், திருநீறும் பஞ்சாமிர்தமும், கற்பூரமும் கலந்த நறுமணம் சுற்றிலும் கமழ்கிறது. இவற்றுக்கு இடையே அன்னியமாக ஒட்டியும் ஒட்டாம





* நந்திக்கு வர்ணம் பூசப்படுகிறது.

லும் 'பெயின்ட்' வாடை! சற்று நிமிர்ந்து பார்த்தால், உயரத்தில் ஒரு நந்தி சிலைக்குச் சிப்பந்தி ஒருவர் வர்ணம் பூசிக் கொண்டிருப்பது தெரிகிறது. பழனி குடமுழுக்குக்குத் தயாராகிக் கொண்டிருக்கிறது என்று உணர்கிறோம் — யாகசாலை கட்டப்பட்டு வருகிறது. சிமெண்ட் கலவையைக் கொண்டு, தாமரைப்பூ வடிவில், மேருவைப் போன்ற அமைப்பு கட்டிக் கொண்டிருக்கிறார்கள். பதினான்கு ஆண்டுகளுக்குப் பிறகு நடக்கவிருக்கும் கும்பாபிஷேகத்துக்குக் கோயில் பழுது பார்க்கப்பட்டு வருகிறது. கோபுரத்தை நிமிர்ந்து பார்த்தால் கலசங்கள் புதுப்பிக்கப்பட்டு வருவது தெரிகிறது. ஜூன் 27—ஆம் தேதி காலை 6.15 மணியிலிருந்து 7.00 மணிக்குள் காஞ்சி ஆசாரியரின் திருவுள்ளப்படி கும்பாபிஷேகம் நடைபெறவிருக்கிறது என்று கூறுகிறார்கள்.

பழுது பார்க்கும் பணிகள் நடந்து வந்தாலும் தரிசனத்துக்காகக் காத்திருக்கும் பக்தர்கள் வரிசையின் நீளம் குறையவில்லை. நாமும் முருகப் பெருமானைத் தரிசிக்கச் செல்கிறோம். தோளில் மல்லிகைச் சரங்கள் புரள, மார்பில் தாமரை மலர்களைக் கொண்டு கோத்த மாலை தவழ, மலர்க்கிரீடம் அணிந்த முருகன் பூ உகந்த தெய்வமாகத் தரிசனம் தருகிறார். பட்டையாக சரிகை போட்ட அங்கவஸ்திரமும், கையில் ஏந்திய தண்டமுமாக, சின்னஞ்சிறு பாலகனாக, தீபச் சுடர்களின் ஒளியில் தீபமங்கள ஜோதியாக, ஞான பண்டித சுவாமியாக, கிண்கிணி பாதனாகக் காட்சி தருகிறார்.

நாம் உருகி நிற்கும்போது உச்சிகால அபிஷேகம் நடைபெறுகிறது. மறை ஓதியபடியே, நீரையும் பாலையும் பஞ்சாமிர்தத்தையும் சந்தனத்தையும் திருநீரையும் பால முருகனின் மெல்லிய திருமேனியில் மெல்ல மெல்லச் சொரிந்து குளிர்விக்கிறார் குருக்கள். உள்ளத்தைக் குளிர்விக்கும் அந்தக் காட்சி முடிவுற்று, அலங்காரம் செய்யத்திரை போட்டதும், முருகப் பெருமான் அருள சுரந்து அளித்த நற்றமிழில் பாட ஆரம்பிக்கிறார் ஓதுவார். செவிகுளிரச் செய்கிறது 'சிவனார் மனங்குளிர' என்ற பொருத்தமான திருப்புகழ். பாடல்களின் பொருள் புரியும் போது மனம் கனிந்து குவிகிறது.

திவ்ய அலங்காரங்கள் முடிந்து திரை விலகுகிறது. அடுக்கு தீபத்தால் ஆராதனை நடைபெறும்போது அஞ்ஞான இருளைப் போக்கி அருளும் ஞானப் பிழம்பு இவன் என்று தெளிகிறோம்.

வெளிப் பிரகாரத்திற்கு வருகிறோம். அங்கே உற்சவ மூர்த்தி உலா வருகிறார். செங்கதிர் வேலன், சிவனருள் பாலன், தூய வெள்ளை ஆடை அணிந்து, மயில் வாகனத்தில் அமர்ந்திருக்கிறார். திரை போட்டு விட்டு அலங்காரம் செய்கிறார்கள். ஆண்டியாக வந்தவன், அடியார்களின் இதய சாம்ராஜ்யத்தை ஆளும் பேரரசனாக வைர முடியும் கலையழகு மிளிரும் ஆபரணங்களும், பட்டாடையும் அணிந்து, திருக்கை வேல் பற்றி, ஒய்யாரமான அழகோடு காட்சி தருகிறான்.

அபிஷேகம் செய்த பாலைப் பிரசாதமாக விநியோகிக்கிறார்கள். நவபாஷாணத் திருமேனியில் சொரிந்த பால், பிணிகளைத் தீர்க்கும் என்று அடியார்கள் நம்புகிறார்கள். போகர் என்ற சித்தர் நவபாஷாணம் என்ற அரிய மருந்துகளால் மூலவர் வடிவத்தை உருவாக்கிப் பிரதிஷ்டை செய்தார் என்று கூறுகிறார்கள். போகர் வாழ்ந்த காலம் எதுவென்று உறுதியாகக் கூற முடியாவிட்டாலும் சேரமான் பெருமாள் நாயனார் இந்தக் கோயிலைக் கட்டினார் என்பதற்குச் சான்றுகள் உள்ளன. பதின்மூன்றாம் நூற்றாண்டுக்குப் பிறகு அரசாண்ட அரசர்களின் கல்வெட்டுக்கள் கோயிலில் இருக்கின்றன. சில எழுத்துக்கள் தெரிந்தாலும், தெளிவாகப் படிக்க முடியாமல் பெரும்பாலான எழுத்துக்கள் அழிந்து போய் விட்டன.



* வெளிப் பிராகாரத்தில்.

கும்பாபிஷேகத்தையொட்டிச் செய்யப்படும் ஏற்பாடுகளைப் பற்றிக் கேட்கும் போது பிரமிப்பாக இருக்கிறது. சுமார் பத்து லட்சம் பக்தர்கள் குடமுழுக்கைக் காண வருவார்கள் என்று எதிர்பார்க்கப்படுகிறது. தொடர்ந்து ஒரு மண்டலத்துக்கு அன்பர்கள் வந்த வண்ணம் இருப்பார்கள் என்று கூறுகிறார்கள். இவர்கள் எல்லோருக்கும் வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து தரவும் குடமுழுக்கு நிகழ்ச்சிகளைச் சீராக நடத்தவும் விழாக் குழு ஒன்று அமைக்கப்பட்டுள்ளது. அரசியல்வாதிகள், பழனிக் கோயிலில் பணியாற்றிய தக்கார்கள், பத்திரிகையாளர்கள், பொது மக்கள் பிரதிநிதிகள் என்று பலர் இக் குழுவில் இடம்பெற்றுள்ளனர். அண்ணா மாவட்ட ஆட்சித் தலைவர் மிருத்யுஞ்சய் ஸாரங்கி, விழாவுக்கு வரும் பக்தர்களுக்கு வசதிகள் செய்து தர மிகுந்த ஈடுபாட்டுடன் உழைத்து வருகிறார்.

முதல் வேலையாகக் குடிதண்ணீர் வசதிக்காக இருபது ஆழ்துளைக் கிணறுகள் இறக்கப்பட்டுள்ளன. பழனி மற்றும் சுற்று வட்டாரத்திலுள்ள பள்ளி, கல்லூரிகளிலும், பொதுச் சத்திரங்களிலும் சுமார் இரண்டு லட்சம் பேர்கள் தங்குவதற்கு வசதிகள் செய்யப்பட்டு வருகின்றன. தவிர திண்டுக்கல், கோவை, தாராபுரம், தொப்பம்பட்டி, சத்திரப்பட்டி முதலிய இடங்களிலிருந்து பழனிக்கு வரும் சாலைகளில் பொதுமக்கள் தங்குவதற்குக் கொட்டகைகள் போட்டு, வசதிகள் செய்து வருகிறார்கள். இவற்றுள் சில, நிரந்தர அமைப்புக்களாக இருக்கும் என்று கூறுகிறார்கள். கொட்டகைகள் போடப்படும் இடங்களிலெல்லாம் சின்டெக்ஸ் தண்ணீர்த் தொட்டிகள் வைக்கப்படும். இதற்காக அக்கம் பக்கத்து ஊராட்சி ஒன்றியங்களிலிருந்து தண்ணீர்த் தொட்டி லாரிகள் வரவிருக்கின்றன.

ஆண்கள் பள்ளியில் ஒன்றும் பெண்கள் பள்ளியில் ஒன்றுமாக இரண்டு புதிய பேருந்து நிலையங்கள் திறக்கப்படவுள்ளன. வெளியூர்களிலிருந்து வரும் தனியார் கார்கள் இடும்பன் கோவிலருகில் நிறுத்த ஏற்பாடாகியுள்ளது. ஊருக்குள் அவை அனுமதிக்கப்பட மாட்டா.

மலை மீதும், அடிவாரத்திலும் பழனி ஊருக்குள்ளும் மூன்று வைத்திய சாலைகள் நிறுவப்படும். இவை தவிர, பல மருத்துவர்களின் ஒத்துழைப்புடன் நடமாடும் மருத்துவ மனைகளும் அமைக்கப் போகிறார்கள். தேவையான கழிப்பறைகள் கட்டுதல், காலரா தடுப்பூசி போடுதல், பிளீச்சிங் பௌடர் தெளித்தல் போன்ற வழக்கமான ஏற்பாடுகளும் செய்யப்பட்டு வருகின்றன.

குடமுழுக்கு தினத்தன்று ஐம்பதினாயிரம் உணவுப் பொட்டலங்களை விநியோகிக்க தேவஸ்தானம் ஏற்பாடு செய்து வருகிறது.

மலை மீது சுமார் ஒன்பதாயிரம் பேர் தான் ஒரு சமயத்தில் நிற்க முடியும் என்பதால், ஒன்பதாயிரம் பேர் ஏறிய பிறகு மலை மீது யாரையும் அனுமதிக்க மாட்டார்கள். மேலே சென்றவர்கள் குடமுழுக்கு முற்றிலுமாக முடிந்த பிறகே கீழே இறங்க முடியும்..




* யாகசாலை தயாராகிறது.



* சந்தனம், பன்னீர், பஞ்சாமிர்தம்.

பழனி கோயிலுக்கு ஆண்டொன்றுக்கு ஒரு கோடி ரூபாய் வருமானம் வருகிறது என்றும், கும்பாபிஷேகத்தையொட்டி ஒரு கோடி ரூபாய் காணிக்கையாக வரக் கூடும் என்றும் அறிகிறோம். பழனி தேவஸ்தானத்தினர் கலைக் கல்லூரி, சித்த வைத்திய சாலை, தங்கும் விடுதி, கல்யாண சத்திரம்

போன்றவை நிறுவி, பராமரித்து வருகிறார்கள். ஆதரவற்ற குழந்தைகளைப் பராமரித்து வருகிறார்கள்; நூல் நிலையம் அமைத்துள்ளார்கள், படி ஏறி மேலே செல்ல முடியாதவர்களுக்கு இழுவை ரயில் (விஞ்ச்) வசதி ஏற்படுத்தியுள்ளார்கள்.

ஆனால், குடமுழுக்கையொட்டி தேவஸ்தானத்தார் யாக சாலைச் செலவுகள், வைதீகச் செலவுகள் மற்றும் உணவுப் பொட்டல விநியோகத்துக்கான செலவுகள் தவிர வேறு எந்தச் செலவையும் ஏற்கவில்லையாம்.

ஊராட்சி ஒன்றியமும் தமிழக அரசும் செலவின் பெருங்சுமையை ஏற்க வேண்டிய நிலையில் உள்ளதாகச் சொல்லப்படுகிறது. தமிழக அரசு இவ்வைபவத்துக்கு எவ்வளவு நிதியுதவி அளிக்கும் என்று ஜூன் மூன்றாம் தேதி வரை அறிவிக்கவில்லை.

இந்தச் சந்தர்ப்பத்தில் தேவஸ்தானத்தார் பல நிரந்தர வசதிகளைச் செய்து வைத்தால் இங்கு வெள்ளமாகத் திரண்டு வரும் பக்தர்களுக்கு அவை என்றென்றும் சௌகரியமாக இருக்கும் அல்லவா...? அதோடு மற்றொரு முக்கியமான காரியத்தையும் அவர்கள் செய்யலாம். அடிவாரத்தில் அர்ச்சனைப் பொருட்களை நாற்பது ரூபாய் என்று விலை கூறும் பகல் கொள்ளைக்கு ஒரு முற்றுப்புள்ளி வைக்கலாம்; காலணிகளைப் பாதுகாக்க இருபத்தைந்து பைசா சீட்டைக் கொடுத்து விட்டு நாற்பது பைசா வசூலிக்கும் அநியாயத்துக்கு முடிவு கட்டலாம்.

**பா**ரத நாட்டின் உண்மையான பலம் அதன் ஆன்மீக பலமே. அதனை என்றென்றும் பேணிப் பாதுகாக்க வேண்டும் என்பதற்காகத்தான் நாடெங்கிலும் கோயில்கள் அமைத்து அவற்றில் எல்லாம் உத்சவங்களையும் திருவிழாக்களையும் அவ்வப்போது நடத்தும் வழக்கங்களை நமது முன்னோர்கள் ஏற்படுத்தினார்கள். அவ்வப்போது கோயில்களைப் புதுப்பித்துக் கும்பாபிஷேகங்கள் செய்வது, பராமரிப்பு என்ற நோக்கில் மட்டுமின்றி, பலதரப்பட்ட மக்களும் ஒன்று கூடித் தங்களுக்குள் இருக்கக் கூடிய வேறுபாடுகளை மறந்து இறையுணர்வில் ஒன்று கலக்க வேண்டும் என்பதற்காகத்தான்.

நாங்கள் பழனிக்குச் சென்றபோது 'முருகா! முருகா!' என்று பக்தியில் கரைந்து, பரவச நிலையில் கரங்களைத் தலைக்கு மேல் உயர்த்தித் தொழுத நூற்றுக்கணக்கானோரைக் கண்டோம். இதே பரவசம் ஜூன் 27 – ஆம் தேதி லட்சோப லட்சம் மக்களை ஆட்கொள்ளும் என்று எண்ணிய போது, அதுவே நாமறிந்த வரையில், பக்தி பரவசத்தின் உச்சகட்டமாக அமையும் என்று தோன்றியது; மெய்சிலிர்த்தது.

— **ஆனந்தி.**

மேலட்டை வண்ணப்படங்கள், மற்றும் புகைப்படங்கள்: **சே. வி. ஆனந்த்.**

பழனி முருகன் வண்ண ஓவியம்: லதா.

---

## அருள்வாக்கு

ஆசார்யன் கிடைத்து விட்டால் போதும், ஸ்வாமி கூட வேண்டாம்; ஸ்வாமி கூட ஆசார்யனுக்கு ஸமதையில்லை என்று பக்தி பண்ணினவர்கள் எல்லா ஸம்பிரதாயத்திலும் உண்டு. குரு என்றால் கூடவே இருந்தாக வேண்டிய சிஷ்யன் — சிஷ்ய என்பதை வைத்துத்தான் சீக்கிய மதம் என்பது ஏற்பட்டிருக்கிறது. அதில் குரு கோவிந்தஸிங் என்பவர் 'கல்ஸா' என்கிற அவர்களுடைய ஸ்தாபனத்தை ஏற்படுத்தும்போது நரபலி வேண்டும் என்று கேட்டாராம். உடனேயே ஒருத்தர் எழுந்திருந்து தன் தலையையே கொடுப்பதற்காக அவரோடு போனாராம். அவரை அழைத்துக் கொண்டு போன கோவிந்தஸிங் கொஞ்ச நாழிக்கு அப்புறம் ரத்தம் சொட்டும் கத்தியோடு திரும்பி வந்து இன்னொரு பலி வேண்டும் என்றாராம். உடனே இன்னொருத்தர் எழுந்திருந்து அவரோடு போனாராம். மறுபடியும் அவர் ரத்தம் சொட்டும் கத்தியோடு திரும்பி வந்தாராம். இப்படியே ஐந்து தடவை அவர் பலி கேட்க ஐந்து பேர் சந்தோஷமாக குரு வார்த்தைக்காகப் பிராணத் தியாகம் பண்ணுவதும் பெரிசில்லை என்று அவர் பின்னோடு போனார்களாம். அப்புறம் அவர் அந்த ஐந்து பேரையுமே ஸபைக்கு அழைத்துக் கொண்டு வந்து தம்மைச் சேர்ந்தவர்களின் பக்தி விச்வாஸத்தைச் சோதனை பண்ணுவதற்காகவே தாம் இப்படி விளையாட்டாகப் பலி கேட்டதாகவும், வாஸ்தவத்தில் எவரையும் கொல்லாமல் ஏதோ ஆட்டு ரத்தத்தைத்தான் காட்டியதாகவும் சொல்லி உயிரைத் திருணமாக நினைத்துப் பலியாவதற்கு வந்த ஐந்து பேரையும் கல்ஸாவில் முக்யஸ்தர்களாக நியமித்தாராம்.



இப்படி எல்லா மதங்களிலும் அவற்றில் தோன்றிய மஹான்களைத் தெய்வமாக விச்வஸித்த சிஷ்யர்கள் இருந்திருக்கிறார்கள். இந்த குரு பக்தியாலேயே அவர்களும் குருவைப் போன்ற யோக்யதை ஸம்பாதித்துக் கொண்டிருக்கிறார்கள். இப்படி ஒரு Spiritual status (ஆத்மிக அந்தஸ்து) வந்த பிறகும் தங்களை மேலே கொண்டு வந்த மஹானையே உயர்த்திச் சொல்லிப் பணிந்து வந்திருக்கிறார்கள்.

— **ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**

# பொன்னியின் செல்வன்

அமரர் கல்கி



## அத்தியாயம் 18

## நிமித்தக்காரன்

நம்பியாண்டார் நம்பியை வரவேற்பதற்காகக் கூட்டியிருந்த சபை கலையும் சமயத்தில் பெரிய மகாராணி தம் செல்வக் குமாரனிடம், "மகனே! நான் இவர்களை அரண்மனை வாசல் வரையில் சென்று வழி அனுப்பி விட்டு வருகிறேன். அதற்குள் நீ உன் இருப்பிடம் சென்று சிரமபரிகாரம் செய்து கொண்டு திரும்பி வா! உன்னிடம் ஒரு முக்கியமான விஷயம் பேச வேண்டும்!" என்றார்.

"ஆகட்டும், தாயே!" என்று சொல்லி விட்டு மதுராந்தகர் புறப்பட்டார். அரண்மனையில் அவர் தங்கியிருந்த பகுதிக்குப் போனார். அவருடைய உள்ளத்தில் ஆத்திரமும் அசூயையும் கொழுந்து விட்டு எரிந்தன. யாரோ வழியோடு போகிற ஆண்டிப் பண்டாரத்துக்கு எவ்வளவு தடபுடலான மரியாதைகள்! இராஜ குலத்தின் கௌரவத்துக்கே தம் தாயினால் பங்கம் நேர்ந்துவிடும் போலல்லவா இருக்கிறது! பழுவேட்டரையர்கள் தம் அன்னையைப் பற்றி அடிக்கடி குறை சொல்லுவதில் வியப்பு ஒன்றுமில்லை. உடம்பில் சாம்பலைப் பூசிக் கொண்டு ருத்திராட்ச மாலைகளை அணிந்து கொண்டு யார் வந்தாலும் பெரிய மகாராணிக்குப் போதும்! பதிகம் ஒன்றும் அவன் பாடிக் கொண்டு வந்துவிட வேண்டும்; அல்லது கோயில், குளம், திருப்பணி என்று சொல்லிக் கொண்டு வந்துவிட வேண்டும். இப்படிப்பட்டவர்களுக்கு அள்ளிக் கொடுத்து இராஜாங்க பொக்கிஷத்தையே இவர் சூனியமாக்கி விடுவார் போலிருக்கிறது! போதாதற்கு, இளவரசி குந்தவை ஒருத்தி எப்போதும் அருகில் இருக்கிறாள். கோயில் திருப்பணி செய்து மிச்சம் ஏதேனும் இருந்தால் அதை மருத்துவசாலை ஏற்படுத்துவதற்காகச் செலவிட்டு விடுகிறாள். இப்படியெல்லாம் இவர்கள் செய்வதற்கு இடம் கொடுத்து வந்தால் நாளை நம்முடைய மனோரதம் எப்படி நிறைவேறும்? சோழ சிங்காதனத்தில் ஏறி நாலா திசைகளிலும் சைன்யங்களை அனுப்பி இந்த நில உலகம் முழுவதையும் வென்று ஒரு குடை நிழலில் ஆளுவது எவ்விதம் நடைபெறும்?

மறுபடியும் பெரிய மகாராணிக்கு மகனிடம் ஏதோ அந்தரங்கம் பேச வேண்டுமாம்! என்ன அந்தரங்கத்

தைச் சொல்லப் போகிறாரோ, தெரியவில்லை! அஷ்டாங்க யோகம், இயம நியம நிதித்தியாசனம் ஆகியவற்றைக் குறித்து ஒருவேளை பேச ஆரம்பித்து விடுவார். கண்களின் பார்வையை மூக்கு நுனியில் செலுத்திக் குண்டலினியை மேல் நோக்கிக் கொண்டு வருவதினால் அறுபத்தி நாலு கலைகளையும் கல்லாமல் கற்கும் முறையைப் பற்றி ஒருவேளை உபதேசிக்க ஆரம்பித்து விடுவார்! அல்லது நடராஜருடைய ஆனந்தக் கூத்தின் உட்பொருளைக் குறித்தும், அவருடைய சடா மகுடம் எதைக் குறிக்கிறது, அவர் அணிந்திருக்கும் பிறை எதைக் குறிக்கிறது என்பவை குறித்தும் சொல்ல ஆரம்பித்து விடுவார். இப்படியெல்லாம் சொல்லிச் சொல்லித்தான் நம்மை உலகம் அரைப் பைத்தியம் என்று பரிகசிக்கும்படியான நிலைக்குக் கொண்டு வந்து விட்டார். அம்மாதிரி பேச்சுக்களுக்கு இனிமேல் இடங்கொடுக்கக் கூடாது. அவர் பேசித்தான் தீருவேன் என்றாலும், நாம் காதிலே வாங்கிக் கொள்ளக் கூடாது....

இருக்கட்டும்; அன்னை மீண்டும் கூப்பிட்டு அனுப்புவதற்குள் அந்த நிமித்தக்காரனிடம் பேசியாக வேண்டும்; வருங்காலத்தைப் பற்றிக் கேட்டாக வேண்டும். யாருமே அறிந்திருக்க முடியாத இரண்டு மர்மமான செய்திகளை அவன் எப்படி அறிந்து கொண்டான்? அதை நினைத்துப் பார்த்தால் ஒரே வியப்பாக அல்லவா இருக்கிறது! அதிசயமான சக்தி அவனிடம் ஏதோ இருக்க வேண்டும். சென்று போன நிகழ்ச்சிகளை அறிந்து கூறியது போல் வருங்காலத்தில் நடக்கப் போவதைப் பற்றியும் அவனால் கூற முடியுமா? — அவனையே கேட்டுப் பார்த்து விடலாம்.

சபையிலிருந்து நாம் புறப்படும் சமயத்தில் நிமித்தக்காரன் அங்குமிங்கும் பார்த்துக் கொண்டு தயங்கித் தயங்கி நிற்பதை மதுராந்தகர் கவனித்தார். அவனைத் தம்முடன் வரும்படி சமிக்ஞையினால் கட்டளையிட்டார். வந்தியத்தேவனுடைய கண்கள் இளவரசியின் முகத்தைப் பார்க்கவும், நயன பாஷையினால் செய்தி உணர்த்தவும் ஆர்வம் கொண்டிருந்தன. ஆனால் இளவரசி மீண்டும் அவனைத் திரும்பிக் கூடப் பாராமல் பெரிய மகாராணியுடன் போய் விட்டாள்.

இது என்ன? தன்னை இளவரசி அடியோடு மறந்து விட்டாளா? அப்படித்தான் இருக்க வேண்டும். எத்தனையோ ஆயிரமாயிரம் பேரை அவர் தினம் தினம் பார்த்து வருகிறார், ஒருதடவை — இரண்டு தடவை பார்த்த தன்னுடைய முகம் அவர் மனத்தில் எவ்விதம் நினைவிருக்கும்? நான் பைத்தியக்காரன்; இரவும் பகலும் எத்தனை எத்தனையோ விபரீத சம்பவங்கள் — அபாயங்களிடையிலும் இளவரசியின் திருமுகத்தையே நினைத்துக் கொண்டிருந்தேன். இளவரசி எதற்காக என்னை நினைத்திருக்க வேண்டும்? தேனீ தேனை விரும்பி மலரைச் சுற்றிச் சுற்றி வருகிறது. மலருக்குத் தேனீயைப் பற்றி என்ன கவலை? மலர் சூரியனைப் பார்த்துப் புன்னகை புரிந்து கொண்டிருக்கிறது. குந்தவையின் முகமலரை விரியச் செய்யும் சூரியதேவன் யாரோ?....

ஆயினும் தன்னை எதற்காக அனுப்பினாரோ, அந்தச் செய்தியைத் தெரிந்து கொள்வதிலே கூட அவருக்கு ஆர்வம் இல்லாமலா போய்விடும்? தனக்கு முன்னாலேயே யாராவது வந்து சொல்லியிருப்பார்களோ? அது எப்படி முடியும்? இல்லை, இல்லை! அவர் ஏதோ கவலையில் ஆழ்ந்திருக்கிறார் என்











பதை அவர் முகம் நன்றாகக் காட்டியது. தன்னை அடையாளம் கண்டு கொள்ளாததுதான் காரணமாயிருக்க வேண்டும். அந்தரங்க ஓலை எடுத்துக் கொண்டு இலங்கை சென்ற தூதன் மதுராந்தகத் தேவரின் பரிவாரங்களில் ஒருவனாகச் சபைக்கு வந்தால் எப்படி அடையாளம் கண்டுபிடித்துத் தெரிந்து கொள்ள முடியும்? — ஆகா! இளவரசியைச் சந்தித்து, அந் நகரில் நுழைவதற்குத் தான் கையாண்ட யுக்திகளைப் பற்றிச் சொல்லும் போது அவர் எவ்வளவு ஆச்சரியம் அடைவார்? ஆனால் சந்திப்பது எப்படி? செய்தி சொல்லி அனுப்புவது எப்படி?...

"நிமித்தக்காரரா! என்ன யோசனையில் ஆழ்ந்திருக்கிறாய்?" என்ற மதுராந்தகரின் குரலைக் கேட்டு வந்தியத்தேவன் திடுக்கிட்டான். அதற்குள்ளே அவர்கள் அரண்மனையில் மதுராந்தகத் தேவருடைய தனி அறைக்கு வந்திருந்தார்கள்.

அந்த நாளில் சோதிடர்கள், ஆருடக்காரர்கள், ரேகை பார்த்துக் குறி சொல்வோர், நிமித்தக்காரர் என்று, வருங்காலத்தைப் பற்றிச் சொல்வோர் பலர் இருந்தனர். சோதிடர்கள் ஜாதகம் பார்த்தும், கிரகங்கள் நட்சத்திரங்களின் சஞ்சாரத்தைக் கணித்தும், ஜோதிடம் சொல்வார்கள். ஆருடக்காரர்கள் தங்களிடம் வருவோர் பேசும் சொற்களைக் கொண்டும், ஆருடம் கேட்கும் வேளையைக் கொண்டும், நூற்றெட்டில் ஒரு இலக்கம் சொல்லும்படி கேட்டும் சுபா சுபங்களைப் பற்றிப் பொதுப்படையாகச் சொல்வார்கள். ரேகை சாஸ்திரமோ அன்றைக்கு இருந்தபடியே இன்றைக்கும் இருந்து வருகிறது.

நிமித்தக்காரர்கள் என்பவர்கள் ஞான திருஷ்டி படைத்த முனி புங்கவர்களைப் போல் அகக் கண்ணினால் பார்க்கும் ஆற்றல் உடையவர்கள். அவர்கள் மனத்தை ஒருமுகப் படுத்தி வைத்துக் கொண்டு, அகக் கண்ணின் உதவியினால் முக்கால நிகழ்ச்சிகளையும் நேரில் பார்ப்பது போல் பார்த்து உரைப்பார்கள். சிலர் புறக் கண்களை மூடிக் கொண்டு தியானத்தில் அமர்ந்து சொல்வார்கள்; இன்னும் சிலர் தீபப் பிழம்பை உற்று நோக்கிய வண்ணம் மனத்தை ஒருமுகப்படுத்திக் கொண்டு நடந்து போன, நடக்கப் போகிற நிகழ்ச்சிகளை அந்தத் தீபப் பிழம்பில் பார்த்துச் சொல்வார்கள். இன்னும் சிலருக்கு எதிர்ப்பட்டவர்களின் முகத்தைப் பார்க்கும் போதே அவர்களுடைய சென்ற கால வரலாறும், வருங்கால வரலாறும் மனத்தில் தோன்றிவிடும். இத்தகைய அதிசய சக்திகள் படைத்தவர்களைத் தவிர, காக்கை இடம் போயிற்றா வலம் போயிற்றா என்பது முதலான வெளி நிகழ்ச்சிகளைக் கொண்டு சகுன பலன்களை உரைக்கும் சாதாரண நிமித்தக்காரர்களும் உண்டு.

வந்தியத்தேவன் தன்னை "நிமித்தக்காரா!" என்று மதுராந்தகர் அழைத்ததும் திடுக்கிட்டான். இளவரசர் மேலும் தன்னை என்னென்ன கேள்விகள் கேட்பாரோ தெரியவில்லை. அவற்றுக்கெல்லாம் சாமர்த்தியமாகத் தக்க விடை கூறிச் சமாளித்துக் கொள்ள வேண்டும். கடவுளே! இங்கிருந்து, இவரிடமிருந்து தப்பித்துச் செல்லுவது எப்படி? இளவரசியைத் தனியாகச் சந்தித்துப் பேசுவது எப்படி?...

"வேறு யோசனை ஒன்றுமில்லை, ஐயா! நான் நிமித்தக்காரனாயிருப்பதைக் காட்டிலும் இப்போது சபையில் பார்த்த பிள்ளையைப் போல்

நாலு பதிகங்களைக் கற்றிருந்தால் எவ்வளவு நன்றாயிருக்கும், எனக்கும் எவ்வளவு உபசாரம் மரியாதையெல்லாம் நடக்கும் என்றுதான் சிந்தித்துக் கொண்டிருந்தேன்!'' என்றான்.

''யார் வேண்டாம் என்றார்கள்! நீயும் தேவாரத் திருப்பதிகம் கற்றுக் கொண்டு 'பாடுவதுதானே?''

''இன்னாருக்கு இன்னபடி என்று எழுதியிருப்பது போலத்தானே நடக்கும், இளவரசே! வீண் ஆசைப்பட்டு என்ன பயன்?''

''பதிகம் பாடிய அந்தப் பிள்ளையைப் பற்றி உனக்கு என்ன தோன்றுகிறது? அவனுடைய யோகம்...''

''மிக உயர்ந்த யோகம். சிவ யோகமும் இராஜ யோகமும் கலந்தது. மன்னர்களும் மகாராணிகளும் அந்தப் பிள்ளைக்கு மரியாதை செய்வார்கள். மகான்களுடைய பெயருடனே அவருடைய பெயரும் சேர்ந்து இப் பூவுலகத்தில் நெடுங்காலம் விளங்கும்.''

வல்லவரையன் ஏதோ குருட்டாம் போக்காக இவ்விதம் கூறினான். ஆனால் மதுராந்தகருடைய மனத்தில் அவனுடைய வார்த்தைகள் பெருங் கிளர்ச்சியை உண்டாக்கி விட்டன.

''என்னுடைய யோகம் எப்படி என்று சொல், பார்க்கலாம்!''

''அவனுடைய யோகத்தைப் போலவே தங்கள் யோகமும்; சிவ யோகமும் இராஜ யோகமும் கலந்தது. ஆனால் இன்னும் மேன்மையானது.''

''அப்பனே! கொஞ்சம் விவரமாகச் சொல், பார்க்கலாம்.''

வல்லவரையன் என்ன சொல்வது என்று யோசிக்க அவகாசம் வேண்டினான். ஆகையால், ''இப்படியெல்லாம் அவசரப்பட்டால் முடியுமா? விவரமாகச் சொல்ல வேண்டுமானால், தீபம் ஏற்றி வைத்து, அகில் புகை போடச் சொல்ல வேணும். தாங்களும் தீபத்துக்குப் பின்னால் உட்கார்ந்து கொள்ள வேணும். அப்போது வருங்கால நிகழ்ச்சிகளை நடக்கப் போகிறபடியே பார்த்துச் சொல்லுவேன்.''


துராந்தகர் பரபரப்பு அடைந்து தீபம் ஏற்றி வைக்கும்படியும், அகில் புகை போடும்படியும் கட்டளையிட்டார்.

தீபத்துக்கு முன்னாலும் பின்னாலும் இரண்டு மணைகளும் போடப்பட்டன. மதுராந்தகர் ஒரு மணையில் உட்கார்ந்த பின்னர் அவருக்கெதிரே வந்தியத் தேவனும் உட்கார்ந்தான்.

கண்ணை மூடிக் கொண்டு சிறிது நேரம் தியானத்தில் ஆழ்ந்திருந்தான். அவனுடைய வாய் ஏதோ மந்திரங்களை முணுமுணுத்துக் கொண்டிருந்தது.

பிறகு அவன் உடம்பை ஒரு குலுக்குக் குலுக்கிக் கொண்டு ஆவேசம் வந்தவனைப் போல் நடித்தான். வெறியாட்டக்காரனைப் போல் அவன் உடல் நடுங்கிற்று.

பின்னர், கண்களை அகலத் திறந்தான். எதிரில் இருந்த தீபத்தின் பிழம்பை உற்றுப் பார்க்கலானான்.

சற்று நேரம் பார்த்து விட்டு மதுராந்தகத் தேவரை நோக்கி, ''ஐயா! தங்களைப் பற்றி அலட்சியமாக நான் ஏதாவது சொல்லியிருந்தால் மன்னிக்க வேண்டும். தங்களுடைய யோகம் சாதாரண யோகம் அல்ல. அங்கே சபையில் உட்கார்ந்து பாட்டுப் படித்த பிள்ளையின் யோகத்துக்கும் தங்கள் யோகத்துக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை. அந்தப் பிள்ளையின் யோகம் அரசர்களின் ஆதரவினால் ஏற்படும் ராஜ யோகம்; தங்களுடைய யோகத்தைப் பற்றி இந்தத் தீபத்திலே நான் காண்பது — ஆகா! என்னையே பிரமிக்கச் செய்கிறது!'' என்றான்.

''அப்படி என்ன காண்கிறாய்? சொல்! சொல்!'' என்றார் மதுராந்தகர்.

''ஆகா! எப்படிச் சொல்லுவேன்? சொல்லுவதற்கு வார்த்தைகள் எனக்குக் கிடைக்கவில்லை! அதோ கண்ணுக்கெட்டிய தூரம் மணிமுடி தரித்த மன்னர்கள் அணிவகுத்து நிற்கிறார்கள். மந்திரிகளும் சாமந்தர்களும் அதிகாரிகளும் வரிசை வரிசையாக

நிற்கிறார்கள். அவர்களுக்கு அப்பால், முடிவில்லாத கடலைப் போல், சேனா வீரர்கள் அலைமோதிக் கொண்டு நிற்கிறார்கள். அவர்கள் கையில் பிடித்த வேல்களும் வாள் களும் மார்பில் தரித்த கவசங்களும் ஒளிவீசிக் கண்ணைப் பறிக்கின்றன. தூரத்திலுள்ள மாட மாளிகைகளின் மேல் ஜனங்கள் நின்று ஆர்ப்பரிக் கிறார்கள். கோட்டை கொத்தளங்கள் மீதெல்லாம் மக்கள் கூட்டம் கூட்ட மாய் நிற்கின்றனர். அவர்கள்... அவர் கள்... ஏதேதோ கோஷம் செய்கிறார் கள்!....''

"சொல், சொல்! மக்கள் என்ன கோஷமிடுகிறார்கள்?''

''இளவரசே! பல்லாயிரம் மக்க ளின் கோஷமாகையால் நன்றாகக் கேட்கவில்லை. 'சோழ குலத் தோன் றல் வாழ்க! திரிபுவன சக்கரவர்த்தி வாழ்க! மன்னாதி மன்னர் வாழ்க!' என்றெல்லாம் கோஷிப்பது போலத் தோன்றுகிறது.''

"அப்புறம் என்ன?''

"மக்கள் திரண்டு கூட்டம் கூட்ட மாக முன்னேறி வருகிறார்கள். வேலும் வாளும் பிடித்த வீரர்கள் அவர்களைத் தடுத்து நிறுத்துகிறார் கள். சிறிது நேரம் அங்கே ஒரே கூச்ச லும் குழப்பமுமாக இருக்கிறது.''

"சரி, சரி! கூட்டம் எதற்காகக் கூடி யிருக்கிறது? அதைச் சொல்!''

"அதைத்தான் நானும் இப்போது பார்க்கப் போகிறேன். கூட்டத்தின் மத்தியில் புலிக்கொடி வானளாவிப் பறக்கிறது. அதற்குக் கீழே மீனக் கொடி, விற்கொடி, பனைக்கொடி, சிங்கக் கொடி, ரிஷபக் கொடி, பன் றிக் கொடி ஆகியவை தாழ்வாகப் பறக்கின்றன. மயன் மாளிகையைப் போன்ற சபா மண்டபத்தின் நடு விலே நவரத்தின கசிதமான தங்கச் சிங்காதனம் போட்டிருக்கிறது. அரு கில் ஒரு பீடத்தில் கோடி சூரியப் பிர காசமான வைர வைடூரியங்கள் பதித்த மணி மகுடம் ஒன்று வைத் திருக்கிறது. சிங்காதனத்துக்கு மேலே தண் மதியின் வெண்ணிலவை யொத்த குளிர்ச்சி பொருந்திய பொன் கொற்றக்குடை விரிந்து கவிந் திருக்கிறது. தேவ கன்னிகையரைப் போன்ற பெண்கள் கைகளில் வெண் சாமரங்களை வைத்துக் கொண்டு காத்திருக்கிறார்கள். பற்பல புண் ணிய தீர்த்தங்களிலிருந்து கொண்டு வந்த தண்ணீருடன் பொற் குடங்கள் வரிசையாக வைத்திருக்கின்றன. இள வரசே! பட்டாபிஷேகத்துக்கு எல் லாம் ஆயத்தமாகி விட்டன!....''

''யாருக்குப் பட்டாபிஷேகம்? அதைச் சொல். அப்பனே!'' என்றார் மதுராந்தகர்.

''இதோ அதுவும் தெரிந்து விடும். சபா மண்டபத்தின் பிரதான வாசற் கதவு திறக்கிறது. பலவகைக் கட்டி யம் கூறிக் கொண்டு சிலர் உள்ளே வருகிறார்கள். வீர கம்பீரத் தோற்ற முடைய கிழவர் ஒருவர் வருகிறார். அவருடைய சகோதரர் போலக் காணப்படும் இன்னொருவர் வரு கிறார். அவர்களுக்குப் பின்னால் மன் மதனையொத்த சுந்தர ரூபமுடைய இராஜகுமாரர் ஒருவர் இதோ வரு கிறார்.....''

"அது யார்? யார்?''

வந்தியத்தேவன் மதுராந்தகரை மறுமுறை உற்றுப் பார்த்து விட்டு மீண்டும் தீபத்தை நோக்கினான்.

''ஐயா! தங்களைப் போலவே அவர் இருக்கிறார்! தங்களைப் போல என்ன? தாங்களேதான்! முன்னால் வந்த இருவரும் தங்களைச் சிம்மா சனத்தை நோக்கி அழைத்துச் செல் கிறார்கள். 'ஜய விஜயீபவா!' என்ற கோஷம் சமுத்திர கோஷத்தைப் போல் எழுகிறது. தங்கள் மீது நூறு





நூறு கரங்கள் மலர்களையும் மணிகளையும் மஞ்சள் நிறத் தானியங்களையும் தூவுகின்றன. இதோ தாங்கள் சிங்காதனத்தை நெருங்கி விட்டீர்கள்! அடடா! இது என்ன? சகுனத் தடை போல் யார் குறுக்கே வருகிறது? தலைவிரி கோலமாக ஒரு ஸ்திரீ குறுக்கே வந்து தங்களுக்கும் சிம்மாதனத்துக்கும் நடுவில் நிற்கிறாள். 'வேண்டாம்' என்று தங்களைத் தடை செய்கிறாள். தாங்கள் அந்த ஸ்திரீயைத் தள்ளுகிறீர்கள்!... அடாடா! இது என்ன, நல்ல சமயத்தில் இப்படிப் புகை வந்து மூடிக் கொள்கிறது? ஒன்றும் தெரியவில்லையே?...''

"பார்! பார்! நன்றாக உற்றுப் பார்! அப்புறம் என்ன நடக்கிறது?''

"இளவரசே! மன்னிக்க வேண்டும்! பெரும் புகைப்படலம் வந்து எல்லாவற்றையும் மறைத்து விட்டது!....''

"பார், அப்பனே! பார்! அந்த ஸ்திரீ யார் என்றாவது பார்! அவளை நீ முன்னம் பார்த்திருக்கிறாயா?''

"இளவரசே! அந்த மாதரசியும் மறைந்து விட்டாள். தாங்களும் மறைந்து விட்டீர்கள். சபை, சிம்மாசனம், கிரீடம், — எல்லாம் மறைந்து விட்டன. இந்த அரண்மனையில் மந்திர சக்தி உள்ளவர்கள் யாரோ இருக்க வேண்டும்! வேண்டுமென்றே மந்திரம் போட்டுத் தடுத்து விட்டதாகக் காண்கிறது. ஐயோ! என் முகமெல்லாம் பற்றி எரிவது போல் தகிக்கிறது!''....

இவ்விதம் கூறி வந்தியத்தேவன் தன் கரங்களினால் முகத்தை மூடிக் கொண்டான். அப்படியே சிறிது நேரம் இருந்து விட்டுக் கண்களைத் திறந்து பார்த்தான்.



துராந்தகத் தேவருடைய உடம்பின் நரம்புகள் எல்லாம் புடைத்துக் கொண்டிருந்தன. அவருடைய முகத்தில், கோபம் கொதித்துக் கொண்டிருந்தது. கண்கள் எரியும் தணல்களைப் போல் பிரகாசித்தன. வந்தியத்தேவனுக்குச் சிறிது பயமாகவே போய் விட்டது. இளவரசருடைய ஆசை வெறியை அளவுக்கு அதிகமாகக் கிளப்பி விட்டு விட்டோமோ என்று பயந்து போனான்.

"மறுபடியும் பார்! நன்றாகப் பார்த்துச் சொல்!'' என்றார் மதுராந்தகர்.

"இளவரசே! அதில் பயனில்லை! ஒரு தடவை மறைந்த காட்சி மறுபடியும் உடனே வராது. சில நாள் கழிந்த பிறகுதான் வரும். தீபத்தைப் பார்த்து வேண்டுமானால் வேறு ஏதாவது காட்சி தெரிந்தால் சொல்லுகிறேன்....''

"சொல், சொல்! என்ன காட்சி புலப்பட்டாலும் சொல்!''

"ஜனங்கள் ஒரே குழப்பமாயிருக்கிறார்கள். துக்கமாயும் கோபமாயும் இருக்கிறார்கள். தூதன் ஒருவன் வந்து அவர்களிடம் ஏதோ செய்தி சொல்லுகிறான். இராஜ குடும்பத்தைச் சேர்ந்த யாரோ ஒருவர் கடலில் முழுகிவிட்டதாகச் சொல்கிறான். ஐயோ! பாவம்! அந்தத் தூதனை ஜனங்கள் அடிக்கப் போகிறார்கள். இளவரசே! அம்மாதிரி ஏதாவது நேர்ந்தால் தாங்கள் அந்த சந்தர்ப்பத்தில் ஜனங்கள் மத்தியில் செல்ல வேண்டாம்! சென்றாலும் ஜாக்கிரதையாகச் செல்லுங்கள்!''

"கடலில் முழுகியது யார் என்று பெயர் சொல்லவில்லையா?..."

"கூச்சலிலும் குழப்பத்திலும் பெயர் காதில் விழவில்லை. அந்தக் காட்சி மறைந்து விட்டது.... இப்போது கழுத்தில் மண்டை ஓடு மாலைகளை அணிந்த ஒரு பயங்கரமான கூட்டம் என் கண்முன் தெரிகிறது. காபாலிகர்கள் — காலாமுகர்கள் போல் தோன்றுகிறார்கள். அவர்களில் ஒருவன் கையில் ஒரு பயங்கரமான அரிவாளை வைத்துக் கொண்டிருக்கிறான். அவனுக்கு எதிரில் பலி பீடம் ஒன்று இருக்கிறது. இளவரசே! இங்கேயும் இராஜகுமாரர் ஒருவர் வருகிறார். காலாமுகர்கள் அவரைச் சூழ்ந்து கொண்டு கொம்மாளம் அடிக்கிறார்கள். ஐயா! தப்பித் தவறிக் கூடத் தாங்கள் அப்படிப்பட்ட கூட்டத்தின் மத்தியில் போக வேண்டாம்!......"

இதைக் கேட்டதும் மதுராந்தகருடைய முகத்தில் வியர்வை துளித்தது. அவர் உடம்பு நடுங்கியது.

வந்தியத்தேவன் அதைக் கவனித்துக் கொண்டான். பின்னர், "இளவரசே! மேலே ஒன்றும் எனக்குத் தெரியவில்லை. மன்னிக்க வேண்டும். என் தலை சுற்றுகிறது. கண் இருளுகிறது. யாரோ மந்திரம் போட்டுத் தடை செய்கிறார்கள். இன்னொரு சமயம் இன்னொரு இடத்தில் பார்த்துச் சொல்கிறேன்!" என்று கூறித் தன் தலையைக் கைகளால் பிடித்துக் கொண்டான்.

அச்சமயத்தில் அரண்மனைச் சேவகன் ஒருவன் வந்து பெரிய மகாராணி செம்பியன்மாதேவி இளவரசரை அழைத்து வரச் சொன்னதாகக் கூறினான்.

மதுராந்தகர் தன் உள்ளத்தில் பொங்கிய ஆத்திரத்தையெல்லாம் அன்னையின் மீது கொட்டி விடுவது என்று தீர்மானித்துக் கொண்டு புறப்பட்டார்.

"ஐயா! தலைவலி பொறுக்க முடியவில்லை. அரண்மனைக்கு வெளியே சென்று இந்த நகரைக் கொஞ்சம் சுற்றிப் பார்த்து விட்டு வருகிறேன்!" என்று வந்தியத்தேவன் அவரிடம் கூறி அனுமதி பெற்றுக் கொண்டான்.



ழையாறை மருத்துவர் மகன் பினாகபாணி பண்டிதனுக்கு வாழ்க்கையில் ஒரு புதிய ரஸம் ஏற்பட்டிருந்தது.- சில நாளைக்கு முன்பு வரையில் அவன் தந்தையிடம் மருந்து சாஸ்திரம் கற்றுக் கொள்ளுவதுடன் திருப்தியடைந்தான். கோடிக்கரைப் பிரயாணத்தின் போது வந்தியத்தேவன் வெளி உலகத்தைப் பற்றிப் பல விஷயங்களை அவனுக்குக் கூறினான். அத்துடன் மட்டும் அவன் நிறுத்தவில்லை. புதிதாகக் காதல் வலையில் விழுந்தவர்களுக்கு அதைப் பற்றி யாரிடமாவது பேசத் தோன்றுவது இயல்பு. வைத்தியர் மகன் முதல் தர அசடு என்று தெரிந்து கொண்ட வந்தியத்தேவன் அவனிடம் பெண்களிடம் காதல் கொள்ளுவதைப் பற்றிய அபாயங்களைப் பற்றிப் பேசலானான். தான் ஒரு பெண்ணிடம் காதல் கொண்டு அதன் பயனாக அனுபவித்து வரும் இன்ப துன்பங்களைப் பற்றியும் கூறினான்.

வைத்தியர் மகன் பினாகபாணி இந்தப் பேச்சுக்களை முதலில் அவ்வளவாக ரசிக்கவில்லை. சிறிது சிறிதாக அவன் மனம் மாறியது. வந்தியத்தேவனிடம் விவரமில்லாத அசூசையும் ஆத்திரமும் ஏற்பட்டன. அவனுடைய மனத்தைக் கவர்ந்த மங்கையின் ஊர், பெயர் என்ன என்று கேட்டான். வந்தியத்தேவன் சொல்ல மறுத்து விட்டான். அதனால் பினாகபாணியின் கோபம் அதிகமாயிற்று. கோடிக்கரை போய்ச் சேருவதற்குள் வந்தியத்தேவனை வைத்தியரின் மகன் தன்னுடைய சத்துருவாகவே கருதத் தொடங்கி விட்டான்.

அவன் மனத்திற்குள் புகைந்து கொண்டிருந்த தீ பூங்குழலியைப் பார்த்ததும் கொழுந்து விடத் தொடங்கியது. பூங்குழலி அவனை மறுதளித்ததுடன் பரிகாசமும் செய்தாள். அவள் தன்னைக் காட்டிலும் வந்தியத்தேவனை அதிகம் மதிக்கிறாள் என்று

தெரிய வந்ததும் பினாகபாணியின் பைத்தியம் முற்றி விட்டது. வந்தியத்தேவனைத் தொடர்ந்து வந்த வீரர்களிடம் அவனைக் காட்டிக் கொடுக்கவும் துணிந்தான்.

பழுவேட்டரையரின் ஆட்கள் வந்தியத்தேவனைப் பிடிக்க முடியாமல் பினாகபாணியைப் பிடித்துக் கொண்டு தஞ்சை சென்றார்கள். சிறிது நேரம் அவன் பாதாளச் சிறையில் வசிக்கும்படி நேர்ந்தது. இதனாலெல்லாம் அவனுக்கு முன்னமே வந்தியத்தேவனிடம் உண்டாகியிருந்த கோபம் மேலும் வளர்ந்தது.

இளவரசி குந்தவை அவனைப் பார்த்துப் பேசி விடுதலை செய்வதற்காகப் பாதாளச் சிறைக்குப் போவதற்கு முன்னாலேயே அவன் விடுதலையாகியிருந்ததைக் கண்டோம். விடுதலை செய்தவள் பழுவூர் இளைய ராணி நந்தினிதான். தன்னிடம் சொல்லிக் கொள்ளாமல் வந்தியத்தேவன் தஞ்சை அரண்மனையிலிருந்து தப்பித்துச் சென்றது பற்றி நந்தினி கோபமும் சந்தேகமும் கொண்டிருந்தாள். அவன் பழையாறை சென்று பிறகு ஈழநாட்டுக்குத் தப்பிச் சென்றதை அறிந்த பிறகு அவளுடைய சந்தேகம் அதிகமாயிற்று. எப்படியும் ஒருநாள் பழையாறைக்குத் திரும்பி வந்து இளவரசி குந்தவையைப் பார்க்க முயல்வான் என்று ஊகித்தாள். அப்போது அவனைக் கண்டுபிடித்துச் செய்தி அனுப்பப் பழையாறையில் தனக்கு நம்பகமான ஆள் ஒருவன் வேண்டும் என்று தீவிரமாக எண்ணினாள்.

வைத்தியர் மகன் பினாகபாணியைப் பார்த்துப் பேசிய பிறகு அவன் அந்த வேலைக்குச் சரியான ஆள் என்று முடிவு செய்தாள். அவனிடம் அந்தப் பெரிய பொறுப்பை ஒப்புவித்தாள்.

"உனக்குத் துரோகம் செய்து விட்டுத் தப்பிச் சென்றவன் சீக்கிரத்தில் ஒருநாள் பழையாறைக்குத் திரும்பி வருவான். நீ கண்ணும் கருத்துமாகப் பார்த்திருந்து அவன் எங்கெங்கே போகிறான், என்னென்ன செய்கிறான் என்பதைக் கவனித்து எனக்கு உடனே சொல்லி அனுப்ப வேண்டும். அவ்விதம் செய்தால் உனக்கு வேண்டிய வெகுமதிகளை அளிப்பேன்" என்றாள்.

பின்னர் சின்னப் பழுவேட்டரையரும் அவனை அழைத்து வந்தியத்தேவனைப் பற்றிக் கட்டளை இட்டார். "அந்த இராஜத் துரோகி திரும்பி வரும்போது அவனைப் பிடித்துக் கொடுத்தால் உன்னை நமது ஒற்றர் படையில் சேர்த்துப் பெரிய அதிகாரியாக்கி விடுவேன்" என்று அவனுக்கு ஆசை காட்டியிருந்தார்.

அது முதல் பினாகபாணி மருத்துவத் தொழிலில் பற்றை இழந்து விட்டான். ஏதேதோ ஆகாசக் கோட்டைகள் கட்டிக் கொண்டே பழையாறை நகரின் வீதிகளில் ஓயாமல் அலைந்து கொண்டிருந்தான். திடீர் திடீரென்று அவனுக்குச் சந்தேகம் உதித்து விடும். வீதியில் போகிறவர்களின் அருகில் ஓடிச் சென்று முகத்தை உற்றுப் பார்ப்பான். "இவன் இல்லை!" என்று முணுமுணுத்துக் கொண்டே அப்பால் செல்வான். இதைப் பார்த்த பலரும் வைத்தியர் மகனுக்குச் சித்தப்பிரமை பிடித்து விட்டதென்று எண்ணத் தொடங்கினார்கள்.

ஆயினும் பினாகபாணி தன்னுடைய முயற்சியைக் கைவிடவில்லை.

மதுராந்தகத் தேவரும் அவருடைய பரிவாரங்களும் பழையாறைக்குள் பிரவேசித்த போது பினாகபாணி அவர்களை அவ்வளவு நன்றாகக் கவனிக்கவில்லை. அவர்களில் வந்தியத்தேவன் இருக்கக் கூடும் என்று அவன் எதிர்பார்க்கவில்லை. திருநாரையூர் நம்பியின் பல்லக்கைச் சூழ்ந்திருந்த பெருங் கூட்டத்திலே அவன் சுற்றிச் சுற்றி வந்து பார்த்துக் கொண்டிருந்தான். அப்போது சற்றுத் தூரத்தில் மதுராந்தகருடைய பரிவாரம் போவது தெரிந்தது. மதுராந்தகருக்கு அருகில் குதிரை மேலிருந்தவன் ஒரு தடவை திரும்பிப் பார்த்த போது பினாகபாணிக்கு ஐயம் உதித்தது. ஆனால் அவன் விரைவாகச் சென்று அரண்மனையில் புகுந்து விட்டபடியால் சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்ள முடியவில்லை.

(தொடரும்)

# ஹா!!!

## புதிய ஸிபாகா டாப் டூத்பேஸ்ட்...
## ஒவ்வொரு சுவாசமும் புத்துணர்ச்சிமயம்.







முன்னைவிட
சிறந்த சுவை
அதிக நுரை

ஸிபாகா டாப்பில் நன்கு பரவும்
விசேஷ பொருள் உண்டு. இது
உடனடியாக வாய் முழுதும் பரவி,
பற்சிதைவை உண்டாக்கும்
நுண்கிருமிகளை அழித்து,
வாய் துர்நாற்றத்தைத் தடுக்கிறது;
உங்கள் வாயையும், பற்களையும்
துப்புரவாக சுத்தம் செய்யும் போதே,
உங்கள் சுவாசத்திற்கு முழுமையான
புத்துணர்ச்சியையும் தருகிறது.

**சுவாசத்தின் புத்துணர்ச்சியை
சோதித்துப் பாருங்கள் இப்படி...
ஹா! ஸிப்பர் ஃப்ரெஷ்ஷ்...
ஸிபாகா டூத்பேஸ்ட்.**



முழுமையான புத்துணர்ச்சி
வாய்க்கு முழுப் பாதுகாப்பு

**ஸிபாகா் டாப்**
டூத்பேஸ்ட்

இந்துஸ்தான் ஸிபா கய்கியின் தரமிக்க தயாரிப்பு.

RCA/CT/141/86-TM-1

# திருவுளச் சீட்டு

## சுஜன்

கடைசியாக ஒருமுறை சங்கரநயினார் கோயில் கோபுரக் கலசத்தின் அழகை ரசித்துக் கொண்டே திரும்பிய நான், திடீரென்று அங்கே ஒலித்த வளையல் சப்தங்களையும், கிழவர் ஒருவரின் சிரிப்பையும் கேட்டுத் திரும்பினேன்.

"ஊ...ம்... ஊ...ம்... அதெல்லாம் முடியாதும்மா. நான் நினைக்கிறபடி தான் நடக்கும். நீயே பாரேன்..." என்றார் கிழவர்.

"அவ்வளவு நம்பிக்கையாக நீங்கள் எண்ணும் போது ஏன் என் பக்கம் மட்டும் ஜயிக்காது? இன்று நீங்கள் கண்டிப்பாகத் தோற்றுத்தான் போகப் போகிறீர்கள், பாருங்களேன்...."

— கள்ளமில்லாமல் ஒலித்த ரவிவர்மாவின் உயிரோவியத்தைக் கண்டு அப்படியே அழகில் மயங்கி நின்றேன்.

எனினும், அவர்கள் விவாதத்தின் காரணம் புரியாது விழித்தேன்.

"அது சரிம்மா. என் குணம்தான் உனக்கு நன்றாகத் தெரியுமே. நான் நினைத்துக் கொண்டதை உடனே..."

"அது சரிங்கப்பா. இப்போ நம்ப இட்டே...."

"கொஞ்சம் இரும்மா. ஆபத்துக்குப் பாவமில்லை...." என்று சொல்லிக் கொண்டே

"ப்ளீஸ் எக்ஸ்க்யூஸ் மீ...." — என்று என்னை அழைத்த போது, நான் ஆகாயத்தில் சஞ்சரித்துக் கொண்டிருந்தேன்.

இரண்டாம் முறையாக அவர் என்னை அழைத்த போதுதான், என் சுய நினைவிற்குத் திரும்பினேன்.

"தயவு செய்து தவறாக நினைத்துக் கொள்ளாதீர்கள். ஒரு சிறிய பேப்பர் இருந்தால்...." — என்று கிழவர் கேட்ட போது அப்படியே விக்கித்து நின்றேன்.

அப்பொழுதுதான் முதன் முதலாக என் தவறை உணர்ந்தேன். எப்பொழுதுமே பாக்கெட் டைரியை வைத்துக் கொண்டிருப்பவன், அன்று பார்த்து...

கிழவரை விட்டுத் தள்ளுங்கள்! கேவலம் ஒரு சிறிய காகிதத் துண்டு இல்லாமையால், ஓர் அழகிய பெண்ணின் நட்பு பறிபோய்க் கொண்டிருக்கிறதே என்று பரிதவித்துப் போனேன்.

நல்ல வேளையாக அடுத்த வினாடியே மழை வருவதற்கு அறிகுறியாகத் திடீரென்று குளிர்ந்த காற்று வீசவே, ஆபத்பாந்தவனாக, ஒரு வெள்ளைக் காகிதம் என் கால்களில் தஞ்சமடைந்தது.

வெட்கத்தை விட்டுக் கீழே குனிந்து காகிதத்தை எடுத்துப் பெரியவரிடம் கொடுத்தேன்.

"ரொம்ப நன்றி தம்பி! சிரமம்...." — என்று சொல்லிக் கொண்டிருந்த பெரியவரைத் தடுத்து,

"சார், தயவு செய்து தவறாக நினைக்காதீர்கள். என் பெயர் நீரஜா. இவர் என் தந்தை சிவப்ரகாசம். பல வருடங்களாக இவருக்கு ஒரு கெட்ட பழக்கம். என்ன செய்தும் அந்தப் பழக்கத்தை மாற்ற முடியவில்லை. எந்த ஒரு சிறிய விஷயமாக இருந்தாலும் திருவுளச் சீட்டு போட்டுப் பார்த்துத் தான் முடிவெடுப்பார். நாளடைவில் எனக்கும் இந்தத் தொற்று நோய் பிடித்துக் கொண்டது. இப்பொழுது கூட எங்களுக்குள் ஓர் அபிப்பிராய பேதம். சென்னையிலிருந்து கோவில் வழிபாடுகளையும் இயற்கைக் காட்சிகளையும் காணப் புறப்பட்டு இன்றோடு ஏழு நாட்கள் முடிந்து விட்டன. இன்னும் பார்க்க வேண்டிய இடம் குற்றால நீர்வீழ்ச்சி ஒன்றுதான். நானோ, நாளைக்கே குற்றாலம் போக வேண்டும் என்கிறேன். ஆனால், தந்தையோ, நாளை ஸ்ரீ வில்லிப் புத்தூர் ஆண்டாளை வழிபட்டு விட்டு, நாளை மறுநாள்தான் நீர்வீழ்ச்சி காண வேண்டும் என்கிறார். அதற்குத்தான்...."

"நல்ல தந்தை. நல்ல மகள்! இருபதாம் நூற்றாண்டு முடிந்து இருபத்தோராவது நூற்றாண்டில் காலை வைக்கப் போகிறோம். நீங்கள் திருவுளச் சீட்டு என்கிறீர்களே... உங்கள் பயித்தியக்காரத்தனத்தை எண்ணித் தலையில் அடித்துக் கொள்ளத்தான் தோன்றுகிறது....

சூடாகச் சொல்ல வேண்டும் போல் மனம் துடித்தது. ஆனால், என் நாக்கு மேலண்ணத்துடன் ஒட்டிக் கொண்டு சொற்கள் வெளியே வரவில்லை. காரணம், அந்த நீரஜாதான்!

எனக்கு மட்டும் தாய் தந்தையர் இல்லாமல் இருந்தால் அந்தக் கிழவரின் கால்களில், வெட்கத்தை விட்டு விழுந்திருப்பேன். 'கண்டதும் காதல்' என்பதெல்லாம் பொய் என்று நினைத்திருந்த என்னை ஓர் அழகிய பெண்ணைக் கண்டதும், காதல் வெறி பிடித்துக் கொண்டது.

என் சிந்தனை ஓட்டத்தை அறியாத கிழவர், காகிதத்தை இரண்டாகக் கிழித்து, ஏதோ எழுதிக் குலுக்கிப் போட்டார்.

என்னையே ஒரு சீட்டு எடுக்கச் சொன்

னார். நான் எடுத்துக் கொடுத்த சீட்டைப் பிரித்துப் பார்த்த பெரியவரின் முகம் ஒரு வினாடி சுருங்கியது. ஆனால் அடுத்த வினாடியே சமாளித்துக் கொண்டார்.

''நீரஜா, எனக்கு ஒன்றும் ஆட்சேபணை இல்லை. நாளைக்கே குற்றாலம் புறப்படு கிறோம்'' — என்று சொல்லி விட்டு, என்னி டம்,

''உங்கள் உதவிக்கு நன்றி. வருகிறோம்'' என்று சொல்லி விடைபெற்றுச் சென்றார்.

எப்படியோ இடையில் ஏற்பட்ட நட்பு இவ்வளவு விரைவில் அழிந்து விட்டதே என்று ஏக்கத்துடன் நின்று கொண்டிருந்த என்னை, நீரஜாவின் கண்கள் அழைக்கா மல் அழைத்தன. ஓ! அந்தக் கண்களில் தோன்றிய நவரச உணர்ச்சிகள்....!

மறுநாள் குற்றாலத்திற்குப் போகா விட்டால் எனக்குப் பைத்தியம் பிடித்து விடும் என்ற நிலை. ஆனால், அங்கு நான் சென்று அவர்கள் கண்ணில் பட்டு விட்டால்....

சே! 'உதவி' என்ற போர்வையில் பெண் களை வலைவீசும் காமுகனோ! என்று என்னை நினைத்து விட்டால்!

நண்பன் சாரதியோடு தங்கி இருந்த லாட்ஜுக்குச் சென்று ஆயாசத்தில் உறங்கிப் போனேன்.

“டேய் சங்கரா, இதற்காகத்தான் சொல்கிறேன். கால்கள் வலி எடுக்குமள விற்குக் கோவில்களைச் சுற்றக் கூடாது என்று.''

மறுநாள் சாரதியின் குரல் கேட்டுத்தான் விழித்துக் கொண்டேன்.

''டேய் பழி! சீக்கிரம் கிளம்புடா. இன்று நம் ப்ரோக்ராமே உன் தூக்கத்தால் பாழாகி விடும் போலிருக்கிறதே. இன்று காலை பதி னொரு மணிக்கு நாம் குற்றாலத்தில் இருக்க வேண்டும். ஏற்கெனவே கோடை சீசன் — காலையில் எட்டு மணியிலிருந்தே கூட்டம் அதிகமாகிவிடும்.''

அலுப்புடன் ஒலித்த சாரதியின் குரல், என் செவிகளில் புதிய உணர்ச்சியைப் புகுத்தியது. உடனே புறப்படத் தயாரானேன்.

முக்கிய நீர்வீழ்ச்சியை நெருங்கியதுமே, அவர்களைப் பார்த்து விட்டேன். நண்பனி டம் சொல்லி முடிப்பதற்குள்ளேயே நீரஜா வும் அவள் தந்தையும் எங்களை நெருங்கி விட்டனர்.

''ஏதோ விட்ட குறை, தொட்ட குறை என்று சொல்வார்களே, அதைப் போல இருக்கிறதே நம் சந்திப்பு. நான் மிகவும் கொடுத்து வைத்தவள்....''

நீரஜா சொன்ன போது, அப்படியே சொர்க்கத்தின் நிழலுடன் விளையாடிக் கொண்டிருந்தேன்.

ஆனால், அடுத்த இரண்டே நிமிடங் களில், என் சொர்க்கம் இடிந்து நொறுங்கி யது. விட்ட குறை, தொட்ட குறை என்று



சொன்ன நீரஜாதான் மறுபடி பேசினாள்.

''அடடே, பேச்சு சுவாரஸியத்தில் மறந்தே போய் விட்டது. என்ன மனிதர் நீங்கள்? உங்கள் நண்பரை அறிமுகப்படுத் தும் வழக்கமே இல்லையோ?'' — என்றது தான் தாமதம், சாரதி முந்திக் கொண்டு விட்டான்.

ஆனால் கிழவரோ....! சாரதியை உற்றுப் பார்த்துக் கொண்டே இருந்தார். புருவத்தை இரண்டு முறைக்கும் மேலாக வளைத்துப் பார்த்தார்.

''ஏன் சார், எங்கோ பார்த்தது போல் இருக்கிறதா? இவன் என் நண்பன்தான்...'' — நான் கிழவரிடம் சொல்லிக் கொண்டிருக் கையில்,

''என் பெயர் சாரதி, எம்.காம்., ஸி.ஏ.ஐ. ஐ.பி. ரிசர்வ் வங்கியில் பணிபுரிகிறேன்'' என்று தன்னை நீரஜாவிடம் அறிமுகப்படுத் திக் கொண்ட சாரதி, அதோடு நிற்காமல்,



தன் பாண்ட் பாக்கெட்டிற்குள் கையை விட்டு, அழகிய சிவப்பு நிற ரோஜா ஒன்றை எடுத்து,

''உங்கள் தலையில் சூடிக் கொண்டால், பொன் மலருக்கு வாசனையும் ஏற்பட்டதைப் போல இருக்கும்'' என்றான்.

''பழிகாரப் பாவி'' — என்று மனத்திற்குள் திட்டித் தீர்ப்பதைத் தவிர, என்னால் வேறு ஒன்றையும் செய்ய முடியவில்லை.

நீரஜா விழிகள் மலர ரோஜாவை வாங்கித் தலையில் வைத்துக் கொண்ட போது எனக்குள் ஏற்பட்ட வெறியையும், உணர்ச்சிகளையும், அங்கே யாரும் கவனித்ததாகத் தெரியவில்லை.

''அப்பா, இங்கே பக்கத்திலே, இரண்டு பர்லாங் தூரத்திலே ஒரு சிறிய அருவி இருக்குதாம். அதற்குப் பக்கத்தில் ஒரு 'சுனை' இருக்குப்பா. அதில் குளித்தால்...''

''உன் ஆசைக்கு நான் எப்போது குறுக்கே இருந்தேன்மா? ஆனால் 'சுனை' கொஞ்சம் ஆழம் என்று சொல்வார்களே. அதுவும் இந்த சீசனில் பாசி வேறு அதிகமாகவே படர்ந்திருக்கும்.''

''நல்ல அப்பா நீங்கள். அவர்.... பக்கத்திலே இருக்கும் போது எனக்கு ஏதப்பா ஆபத்து? அப்பா நீங்களும், நேற்று நமக்குக் காகிதம் கொடுத்து உதவிய ஆபத்பாந்தவரும் கூட எங்களுடன் வாருங்களேன்.''

நீரஜா அழைத்தது வேறொரு சமயமாயிருந்தால், உடனே தயக்கமின்றிப் புறப்பட்டிருப்பேன். இப்பொழுது அவள் அழைத்தது கேவலம் வேலைக்காரனுக்கு அழைப்பு விடுப்பதைப் போலத்தான் இருந்தது.

''சாரதி, எனக்குக் கொஞ்சம் தலை வலிக்கிறது'' — என்று நான் சட்டென்று ஒரு பொய்யைச் சொன்னதுதான் தாமதம். உடனே பேய்ச் சிரிப்புச் சிரித்தான் சாரதி.

''நமக்குள் ஏண்டா போலி கௌரவமெல்லாம்? நம்ப நீரஜாகிட்டே ஏண்டா பொய் சொல்றே? உனக்கு நீச்சல் தெரியாதுன்னு 'ஓபனா'ச் சொல்லலாமே. இதற்குப் போய்.....''

''சாரதி....!'' —முதல் முறையாகக் கத்திக் கொண்டே சாரதியின் கழுத்தைப் பிடிக்கப் போனேன்.

பிறக்கும் பொழுதே காவிரி பாயும் நகரில் பிறந்த என்னை எவ்வளவு கேவலமாகப் பேச ஆரம்பித்து விட்டான்?

இன்னும் இரண்டு நிமிடம் இருந்திருந்தால், நானும் சாரதியும் வெட்டிக் கொண்டிருப்போம்.

''ச்சோ... ச்சோ.... என்ன சாரதி, இதெல்லாம். அவருக்கு உடல் நலம் சரியில்லை என்றதும் விடவேண்டியது தானே. நீங்களும், நீரஜாவும் சுனையிலிருந்து சீக்கிரம் திரும்பி வாருங்கள். நானும் சங்கரும் லாட்ஜிலேயே இருக்கிறோம்...'' — என்று சொல்லிக் கிழவர்தான் என்னைத் தன்னுடன் அழைத்துக் கொண்டு வந்தார்.

''ஏன் சார் சங்கரன், சாரதியைப் பார்க்கும் போது எனக்கு என்...''

கிழவர் மறுபடியும் ஏன் சாரதியைப் பற்றிப் பேச ஆரம்பிக்கிறார் என்பது எனக்குப் புரியவேயில்லை... அவர் பேச்சு எனக்குப் பிடிக்காவிட்டாலும்,

''என், நண்பன் நல்லவன்தான்'' —என்று ஒரு பேச்சுக்காகச் சொல்லி வைத்தேன். இப்பொழுது நண்பன் வேம்பாகக் கசந்தாலும் மனசாட்சி வேறுவிதமாகச் சொல்ல இடம் கொடுக்கவில்லை.

''பேஷ்! அப்படிச் சொல்லுங்கள். உன் நண்பனைப் பற்றிச் சொன்னால், உன் குணாதிசயங்களைச் சொல்லி விடுவேன் என்பார்கள்...''

ஐந்து நிமிடங்களில் அறைக்குப் போய்ச் சேர்ந்தோம். கிழவர் மறுபடியும் ஒரு பேப்பரை இரண்டாகக் கிழித்தார். இரண்டு சீட்டுகளிலும், ஏதோ எழுதிக் குலுக்கிப் போட்டார்.

நான் எடுத்துக் கொடுத்த சீட்டைப் பார்த்த அவர் முகம் மலர்ந்தது.

''சங்கர், இந்த வருஷம் நிச்சயமாக நீரஜாவின் திருமணத்தை நடத்தி விட வேண்டியது தான்'' என்றார்.

''அது சரி சார்! மாப்பிள்ளை...?'' எதற்கும் ஒரு முடிவைத் தெரிந்து கொண்டே ஆக வேண்டும் என்ற எண்ணத்துடன் கேள்வியைச் சற்று உரக்கவே கேட்டேன்.

''என்ன...? மாப்பிள்ளையா...? மாப்பிள்ளையை ஏற்கெனவே பார்த்தாகி விட்டதே....'' — மேலும் ஏதோ சொல்ல நினைத்த அவர், அறையின் கதவுகள் பலமாகத் தட்டப்படவே நிறுத்தினார்.

கதவுகள் திறக்கப்பட்ட மறுகணம், இருவருமே அசைவற்று நின்றோம்.

''ஐயா, சிவப்ரகாசம் என்பது தாங்கள் தானே. எவ்வளவோ சொல்லியும் சிறிசுகள் கேட்கவில்லை. அருவிக்குப் பக்கத்தில் உள்ள சுனையில் கால் வைத்த உடனேயே இந்தப் பெண் வழுக்கித் தண்ணீருக்குள் விழுந்து விட்டாள். தம்பிக்கு நீச்சல் தெரியாது போலிருக்கிறது. கடைசியில் இரண்டு பேரையுமே எங்களால் காப்பாற்ற முடியவில்லை.''

''ஐயோ நீரஜா, என் கண்ணே...!'' — என்று கிழவர் தலையில் அடித்துக் கொண்டார்.

நானோ, துக்கம் தொண்டையை அடைக்க வார்த்தை இன்றிப் புலம்பினேன்.

மனிதர்கள் உயிரோடிருக்கும் வரைதான் பொறாமை, வஞ்சம் எல்லாம்.

அடப்பாவி! ஒரு பெண்ணுக்கு முன்பு, தன் இயலாமையைக் காட்டக்கூடாது என்ற போலி கௌரவத்தில், எனக்கு நீச்சல் தெரியாது என்று நீ சொன்ன போது, நான் உனக்குத்தான் நீச்சல் தெரியாது என்ற உண்மையைச் சொல்லாமல் இருந்தேன்...'' — அழுது கொண்டிருந்த என்னிடம்,

''அப்பா சங்கர், இதோ பார். மாப்பிள்ளை யார் என்று கேட்டாயே. இந்தத் திருவுளச் சீட்டில் சங்கர் — நீரஜா கல்யாணம் இந்த வருடம் நடத்தி விடலாம் என்று எடுத்துக் கொடுத்திருக்கிறாய். அது மட்டுமல்ல. என் மேல் உனக்குக் கொஞ்சம் கோபம் கூடத்தான். சாரதியையும், நீரஜாவையும் இப்படித் தனியே அனுப்பலாமா? என்னதான் சகஜமாகப் பழகினாலும், முன் பின் தெரியாத ஒரு ஆண் மகனுடன், ஒரு வயது வந்த பெண்ணை அதுவும் நீச்சல் குளத்திற்கு அனுப்புவது, ஆயிரம்தான் சமாதானம் சொன்னாலும், மிகப் பெரிய தவறு என்று எல்லோரும் பேசுவார்கள் என்பது எனக்குத் தெரியுமப்பா. ஆனால்... சாரதி...! சாரதியை இருபத்தைந்து வருடங்களுக்கு முன்பு, ஒரு திருவிழாவில் இழந்து விட்டு, இன்றைக்கு மீண்டும் பார்த்த போது, எனக்கு அதிர்ச்சி எப்படி இருந்திருக்கும்? கஷ்டப்பட்டு, அடக்கிக் கொண்டு விட்டேன். என்னுடைய இரு குழந்தைகளும், மகிழ்ச்சி வெள்ளத்தில் மிதக்க வேண்டும் என்று நினைத்தேன்... இன்று இரவு உங்கள் திருமணச் செய்தியுடன் இந்த 'சஸ்பென்ஸையும்' உடைக்கலாம் என்று இருந்த எனக்கு, இப்போது எல்லாமே போய் விட்டது...

கிழவர் போட்ட திருவுளச் சீட்டுக்கெல்லாம் மேலாக விதி ஒரு திருவுளச் சீட்டுப் போட்டு விட்டதை எண்ணி நான் அதிர்ச்சியில் ஆழ்ந்தேன். ஆனால் என் மனம் லேசில் சமாதானம் அடையாது என்றும் புரிந்தது. உடைந்து போய் அழுது கொண்டிருந்த கிழவரை நெருங்கி, அவரை என் தோளில் சாய்த்துக் கொண்டேன்.



# ஆகவே, செக்ஷன் 302 படி...

## 24

அந்த ஹோட்டலின் திறந்த வெளி மேஜையில் எதிரெதிரே அமர்ந்திருந்தனர் நிவிதாவும், வினோத்குமாரும். மேஜையின் மேல் விரிக்கப்பட்டிருந்த வெள்ளைத் துணி காற்றில் மெல்லச் சிணுங்கிக் கொண்டிருந்தது. தூரத்தில் ஒரு பள்ளியின் மைதானத்தில் கிரிக்கெட் விளையாடிக் கொண்டிருந்தார்கள். வாகனங்கள் வினாடிக்கொரு முறை ஹாரனடித்து விட்டுக் கடந்தன. அடுத்த கட்டடத்தில் ஆறு ஆண்ட்டெனாக்கள் மேலேயும் கூட்டுறவு விரும்பும் கறுப்புப் பறவைகள்.

''வேடிக்கை பார்க்கத்தான் உன்னை இங்கே அழைச்சிட்டு வந்தேனா நிவிதா?''

''உங்களையே பார்க்கணுமா?''

''பாரேன். பார்க்கப்படறதிலே எவ்வளவு சுகம் இருக்கு தெரியுமா?''

''வினோத், இப்ப என் மனசு எவ்வளவு லேசா இருக்கு தெரியுமா?''

''தெரியாதே! சொல்லு, இப்ப உன் தலையாய பிரச்னை தீர்ந்துடிச்சில்லே?''

''அப்படித்தான் நினைக்கிறேன்.''

''நினைக்கிறியா? இன்னும் உறுதியாச் சொல்லக் கூடாதா? அந்த டிராஃப்ட் பிரச்னையை என்ன செய்யறதுன்னு கேட்டே. அன்னைக்கே நேரா அந்த ஆத்மா டிஸ்ட்ரிப்யூட்டர் முதலாளி வீட்டுக்கே உன்னை அழைச்சிக்கிட்டுப் போனேன். மனுஷன் எப்படி ஆச்சரியப்பட்டுப் போனான்? அப்போ என் கூடப் பேரம் பேசினது யாருன்னு அவன் கேள்விக்கு நம்கிட்டே பதில் இல்லை. ஆனா இந்தாங்க உங்க டிராஃப்ட்டுன்னு ஒப்படைச்சாச்சு. ஆஃபீசைப் பொறுத்த வரைக்கும் ஷியாம் தடால்னு மனசு திருந்தி உன்கிட்டே மன்னிப்புக் கேட்டாச்சு. வேலையை விட்டும் விலகியாச்சு. வேற மேனேஜரும் வந்தாச்சு. இன்னும் என்னதுள்ளே கலக்கம் மட்டும் லேசா இருந்துக்கிட்டே இருக்கு. அது ஏன் நிவிதா?''

நிவிதா தன் நகங்களைப் பார்த்துக் கொண்டாள்.

''ஏன்னு சொல்லத் தெரியலை வினோத். ஆனா ஷியாமோட உடனடி மனமாற்றத்தை என்னால் ஜீரணிக்கவே முடியலை. வேலையை ராஜினாமா பண்றது பெரிய விஷயமில்லையா?''

''வாஸ்தவம் நிவிதா. ஆனா... என் கேள்விக்குப் பதில் சொல்லு. அவன் உன் கால்ல விழுந்து மன்னிப்புக் கேக்கலைன்னா, அவ்வளவு கெஞ்சி கெஞ்சலைன்னா நீ என்ன செய்யறதா இருந்தே?''

''இன்ஸ்பெக்டர்கிட்டே ஒரு ஸ்டேட்மெண்ட் வாங்கி இணைச்சு, கம்பெனி ஹெட் ஆபீசுக்குப் புகார் எழுதி, அவனை வேலையை விட்டு நீக்கறதுக்கு முயற்சி பண்றதா இருந்தேன்.''

''இதை அவன் யூகிச்சிட்டான். நிர்வாகம் கழுத்தைப் பிடிச்சுத் தள்றதுக்கு முன்னாடி கௌரவமா விலகிடத் தீர்மானிச்சுட்டான். அவன் முழுக்க மனசு மாறி இருக்கலாம். இல்லைன்னா மாறாம கோபத்தோட இருக்கலாம். அவனுக்கு இதை விட்டா வேறே வழி கிடையவே கிடையாதும்மா.''

''நேத்துகூட நாம ரெண்டு பேரும் பார்த்தமே பைக்ல போறப்போ. ஷேவ் செய்யாம, தலை கலைஞ்சு, சரியா ட்ரெஸ் பண்ணிக்காம... எனக்கே ஆச்சர்யமாய்ப் போய்டுச்சு — ஷியாம்தானா அதுன்னு... என் முகத்தைப் பார்க்கவே தயங்கிட்டுச் சட்டுன்னு ஒரு கடைக்குள்ளே நுழைஞ்சிட்டானில்லே?''

''ஆமாம். அவன் மனசாட்சி அவனைப் பிராண்டுது நிவிதா. சரி, விடு. எதுக்கு இப்ப அவன் பேச்சு?''

''இருங்க. ஒரு விஷயத்தைச் சொல்லிட்டு இந்த டாபிக்கை முடிச்சுடறேன். இன்னிக்கு அவன்கிட்டேர்ந்து எனக்கொரு தபால் வந்திருக்கு வினோத்.''

நிவிதா தன் கைப்பையைத் திறந்து எடுத்துக் கொடுத்தாள். வினோத்குமார் பிரித்து, காற்றில் பறந்து விடாமல் அழுத்தமாகப் பிடித்துக் கொண்டு படித்தான்.

'செல்வி நிவிதா அவர்களுக்கு...

நீங்கள் மறக்க விரும்பும், வாழ்நாள் முழுவதும் வெறுக்க விரும்பும் ஷியாம் எழுதியது. என் மனத்தின் ரணம் ஆறவே இல்லை. எனது மோசமான நடவடிக்கைகள் என்னைச் சுற்றி நின்று கைகொட்டுகின்றன. நீ ஒரு மனுஷனா என்று நானே என் மேல் காறித் துப்பிக் கொள்கிறேன். அமைதி இல்லாமல் அலை பாய்கிறது மனம். நானே எனக்குக் கொடுத்துக் கொண்ட தண்டனை போதாது என்று தோன்றுகிறது. சுய இரக்கம் வாட்டுகிறது. நீ எதற்குமே லாயக்

பட்டுக்கோட்டை பிரபாகர்

கற்றவன் என்று ஓரம் கட்டுகிறது. நான் தானா அப்படி விநோதமாக, கீழ்த்தரமாக நடந்து கொண்டேன் என்று ஆச்சர்யம் மேலிடுகிறது. எதிலும் நாட்டமில்லை. பிடிப்பு இல்லை. ஒவ்வொரு சமயம் தற்கொலை சிந்தனைகூட எட்டிப் பார்க்கிறது. எனக்குத் தேவை மறுபடி உற்சாகமல்ல. கொஞ்சம் அமைதி. அது உங்களிடமிருந்து கிடைக்கும். உங்கள் பேனாவின் மூலம் கிடைக்கும். அது எனக்கு எழுதும் ஒரே ஒரு வரியின் மூலம் கிடைக்கும். 'மன்னித்து விட்டேன் ஷியாம்' என்ற வரியைத்தான் சொல்கிறேன்... அந்த ஒரு வரி பதிலுக்காக என் கடிதப் போர் தொடரப் போகிறது. எந்த நோக்கமும் இல்லாமல், கடல் அலைகள் போராட்டத்தை நிறுத்தாமல் நடத்தும் போது, என் மன அலைகள் ஓய்வதற்காக இந்தக் காகிதப் போராட்டத்தை நான் விடாமல் நடத்தத்தான் போகிறேன். பயம் வேண்டாம். இந்தப் போராட்டம் சாத்விகமானது.
— ஷியாம்.'

படித்து முடித்து விட்டுச் சில வினாடிகள் மௌனமாக இருந்த வினோத்குமார், ''இவன் என்ன டைப் ஆஃப் கேரக்டர்ன்னே புரிஞ்சுக்க முடியலையே... ரொம்ப ரொம்ப நொந்து போயிட்டான் நிவிதா. சைகலாஜிக்கலா அப்செட் ஆய்ட்டான்.'' என்றான்.

''அதான் எனக்கும் புரியலே இல்லை வினோத். ஒரு கம்பெனியோட மிகப் பெரிய பொறுப்பில இருந்தவன். எக்கச்சக்கமான ஈகோவோட இருந்தவன். இப்படி அடியோட சப்ஜாடா தன் கேரக்டருக்குக் கொஞ்சம்கூட சம்பந்தமே இல்லாம...''

''நிவி, என்ன சொல்றே? எல்லாம் நடிப்புன்னு சொல்றியா?''

''அப்படியும் என்னால உறுதியாச் சொல்ல முடியலை வினோத்.''

''என்னால கொஞ்சம் நம்ப முடியுது நிவிதா. அன்னைக்கு இவன் கையை, காலை வாங்க ஏற்பாடு செய்யட்டுமான்னு நானே தான் உன்னைக் கேட்டேன். அவன் அதற்குப் பிற்பாடு நடந்துகிட்டதை வச்சு இப்ப நானேதான் சொல்றேன் — இதை உண்மையா எடுத்துக்கலாம். இப்போ, அவனுக்கும், உனக்கும் எந்த சம்பந்தமும் இல்லை. இன்னும் அந்த அவமான உணர்ச்சியையே நினைச்சிக்கிட்டிருக்க வேணாம். மறந்துடலாம். எல்லாம் கனவுன்னு ஒதுக்கித் தள்ளிடலாம். ஒரு மனித நேயத்தோட இவனுக்கு நீ ஒரு நாலு வரி எழுதிப் போட்டுடலாம்ங்கிறது என் அபிப்ராயம்.''

சற்று அமைதியாய் இருந்து விட்டு, ''பாவமாத்தான் தெரியுது. அதே சமயம் எல்லாம் போலி வேஷமோங்கிற லேசான சந்தேகமும் இருக்கு... எப்படியும் வந்திருக்கிற லெட்டரை உண்மையானதா நினைச்சு ரெண்டு வரி எழுதிப் போட்டுடறேன்'' என்றாள் நிவிதா.

''வெரிகுட். இப்போ நம்ம பிரச்னைக்கு வரலாமா? எப்போ திருச்சி போறோம்?''

''போறோமா? நோ. நோ. நான் மட்டும் தான் போறேன். நாளைக்குப் புறப்படறதா ஒரு யோசனை. போய் அம்மாகிட்டே பேசணும். தயக்கமா இருக்கு. எப்படி ஆரம்பிக்கிறதுன்னுதான் தெரியலை.''

''நிவிதா, எங்க வீட்டுக்கு நான் உன்னை அழைச்சிட்டுப் போய் அறிமுகப்படுத்தி வைக்கலையா? அது மாதிரி... நாம ரெண்டு பேருமாத்தான் போறோம். என்னை வச்சிக்கிட்டேதான் நீ விஷயத்தை ஆரம்பிக்கிறே. நீ எப்படி முழிக்கிறேங்கிறதை நான் பக்கத்






பபிள் கம்மைக் கொண்டு பபிள் ஊது வதில் சாதனை படைத்தவர் கலிஃபோர் னியாவைச் சேர்ந்த சூசன் மாண்ட்காமரி. 1979 — இல் இவர் ஊதிய ராட்சஸ பபி ளின் விட்டம் 48.9 சென்டி மீட்டர்!



நான்காவது படம் எதுவாக இருக்கும்...?

விடை — 46 ம் பக்கத்தில்.

தில் இருந்து பார்த்தாகணும்.''

''அய்யோ! வேணாங்க வினோத். எனக் கும் சங்கடமா இருக்கும். பேச்சே வராது.''

''டயலாக் நான் சொல்லித் தர்றேன். 'மை டியர் மம்மி. இவர்தான் வினோத் குமார். நம்ம வீட்டுக்கு விளக்கேத்தி வைக்க ஒரு மருமகன் வேணும்னு சொல்லிக்கிட்டிருந் தியே. இவர் நல்லா விளக்கேத்துவார்'.''

நிவிதா நெடுநாளைக்குப் பிறகு அவனது பெண் குரல் வசனத்தை ரசித்து. வாய் விட்டுச் சிரித்தாள்.

**ம**லைக் கோட்டை எக்ஸ்பிரஸ் அவர் களைச் சுமந்து வந்து சேர்த்தது. வீட்டில் அம்மா கண்ணாடி போட்டுக் கொண்டு பேப்பர் படித்துக் கொண்டிருந்தார். இரு வரையும் பார்த்ததும் முதலில் திடுக்கிடல். பிறகு பரவசம்.

முதலில் என் நண்பர் என்று அறிமுகப் படுத்தி, டிபன் எல்லாம் முடிந்த பிறகு; ''அம்மா... வந்து... இவரு... இவரை... என்று நிவிதா வினோத்குமாரைப் பார்த் தாள்.

''சொல்லி முடிம்மா... இல்லைன்னா நான் முடிக்கட்டுமா?'' என்றாள் அம்மா. ''இவரை நான் மனப்பூர்வமா நேசிக்கிறேன். இவங்க வீட்ல இவங்க அப்பா, அம்மாவுக் கும் தெரியும். என்னை அவங்களுக்கு ரொம்ப பிடிச்சுப் போச்சு. எங்க கல்யாணத் துக்கு இப்போ தேவையானது உங்க சம்மதம் தான். அதுக்கப்புறம் இவங்க அப்பா, அம்மா முறைப்படி இங்கே நேர்ல வந்து வெத்தலை, பாக்கு மாத்திக்குவாங்க. அதானே?''

இரண்டு பேரும் பிரமித்து நின்றார்கள்.

''அம்மா, எப்படி ... உங்களுக்கு...?''

''கொச்சின்லேர்ந்து வித்யாசாகர் நாலு பக்கத்துக்கு விவரமா எல்லாத்தையும் எழுதி யிருந்தான்ம்மா. அக்காவுக்கு இதை விடப் பொருத்தமா, சிறப்பா ஒரு வாழ்க்கை அமை யாது. உங்களுக்கு விஷயம் தெரியறப்போ பிகு பண்ணாம, எதிர்க்காம சம்மதம்னு கண்ணை மூடிக்கிட்டுச் சொல்லிடுங்கன்னு எழுதியிருக்கான்ம்மா.''

நிவிதா நெகிழ்ந்து போய், மகிழ்ச்சியில் இறைறிப் போய் நின்றாள்.

''கடைசியா அந்தப் பய இன்னொண் ணும் எழுதியிருக்கான். என் லெட்டரையும் மீறி நீங்க எதிர்த்திங்கன்னா, அவங்க ரெண்டு பேரையும் நானே எங்கேயாச்சும் கடத்திக் கொண்டு போய்க் கல்யாணம் பண்ணி வைப்பேன்னு எழுதியிருக்கான். அந்தப் பிரச்னை எல்லாம் உங்களுக்கு வேணாம். நிவிதா, உனக்குத் தெரியாத விவரம் இல்லை. நீ சாதாரணமா யோசிக் காம எதையும் தீர்மானிக்கவும் மாட்டே. முடிவெடுக்கவும் மாட்டே. அதனால உங்க மனசு போல சந்தோஷமா ரெண்டு பேரும் நல்லா இருங்க.''

தடால் என்று இருவரும் காலில் விழுந்

# புதிய ஸெரிலாக் ஆரஞ்சு




## உங்கள் குழந்தைக்கு ஸெரிலாக் அனுகூலம் அளிக்க இன்னுமோர் வழி

இதோ உங்கள் குழந்தைக்கு இன்னுமோர் அனுகூலம்-புதிய ஸெரிலாக் ஆரஞ்சு. வளரும் ருசிக்கேற்ப உணவில் ஒரு மாறுதல் அளிப்பதோடு, அவனுக்கு ஆரஞ்சின் நன்மைதனையும் தருகிறது. நீங்கள் ஸெரிலாக் ஆரஞ்சு கொடுக்கும் பொழுது குழந்தைக்கு முழுமையான போஷாக்கு, நற்சுவை மற்றும் நொடிப் பொழுதில் தயாரிக்கும் வசதி ஆகிய எல்லா ஸெரிலாக் அனுகூலங்களும் தொடர்ந்து கிடைக்கின்றன. நான்கு மாதங்களிலிருந்து பால் உணவுடன் கூட ஸெரிலாக்-வீட் கொடுக்க ஆரம்பியுங்கள். ஆறு மாதங்களிலிருந்து ஸெரிலாக் ஆப்பிள்/புதிய ஸெரிலாக்-ஆரஞ்சு கொடுங்கள். மூன்று இனிய வழிகளில் ஸெரிலாக் அனுகூலத்தை உங்கள் குழந்தைக்கு அளியுங்கள்

*சுகாதாரமான முறையில் உணவு தயாரிக்கவும், உங்கள் குழந்தைக்கு சரியான விகிதத்தில் போஷாக்கு கிடைக்கவும், டின்னில் தரப்பட்டுள்ள குறிப்புகளை தயவு செய்து பின்பற்றுங்கள்.*






Nestlé

R K SWAMY/FSL/4974-TAM

தார்கள்.

அதன் பிறகு காரியங்களில் விரைவு கூடி... வினோத்குமாரின் அப்பாவும், அம்மாவும் திருச்சி வந்து சந்தித்துப் பேசி... பேசியதிலிருந்து பதினைந்தாம் நாள் திருச்சியில் ஒரு கோவிலில் எளிமையாகத் திருமணம் என்றும், சென்னையில் ஓர் உயர் தர ஹோட்டலில் வரவேற்பு என்றும் தீர் மானமாகி, சென்னையில் திருமண உறுதிக் குப் பிறகான சந்திப்புகளில் நிவிதாவிடம் வெட்கம் அதிகமாகி....

"ஸ்ட்ரேஞ்ச்!" என்றான் வினோத் குமார். "என்ன நிவிதா, ஏன் முந்தி மாதிரிப் பேச மாட்டேங்கறே. இந்த சந்தோஷத்துக் காகத்தானே காத்திருந்தோம். காதல்ல இருந்த த்ரில் கல்யாணம்னதும் குறைஞ் சுடுச்சா?"

"சேச்சே. அப்படி இல்லை. எனக்குச் சொல்லத் தெரியலை. என்னமோ ஒரு குறு குறுப்பு ஏற்படுது இப்பல்லாம் உங்களைப் பார்க்கிறப்போ" என்று நிவிதா சொன்ன இடம் வினோத்குமார் வீட்டு மாடியின் தனியறையில்.

கட்டிலின் மேல் அச்சடித்து வந்த அழைப்பிதழ்கள் யாவும் பரவலாகக் கிடக்க... இன்னொரு புறம் ஜவுளிக் கடைப் பைகளாக அடுக்கப்பட்டிருக்க...

"இந்தத் துணியிலே சபாரிதானே தச்சுக் கப் போறீங்க?"

"ஏய், பேச்சை மாத்தாதே" என்று அவளின் இரண்டு தோள்களிலும் தன் கைகளைப் போட்டுக் கொண்ட வினோத். "காதலனா இருக்கிறப்போ கொஞ்சோ கொஞ்சுன்னு கொஞ்சற இவன், தாலி கட்டினதும் மாறிடுவானோன்னு சந்தேகமா இருக்கா?" என்று கேட்டான்.

"அதெல்லாம் ஒண்ணும் இல்லை. நான் எப்பவும் போலதான் இருக்கேன். ஒரு பிர மிப்பு என்னை ஆக்ரமிச்சிருக்கு. நடந்து டுமா, எந்த பிரச்னையும் வராதேன்னு ரொம்ப கவலையா எதிர்பார்த்திட்டிருந்த ஒரு விஷயம் கைகூடி வர்றப்போ ஏற்படற ஒரு ஆயாசம்... அதிகப்படியான திருப்தி, எக்கச்சக்கமான சந்தோஷம்... இன்னும் எப்படிச் சொல்றதுன்னு தெரியலை. ரெண்டு டிசைன்ல இன்விடேஷன் போட் டீங்களா வினோத்?" என்று கையில் எடுத் துப் பார்த்தாள்.

"ஆமாம். கேக்க மறந்துட்டனே நிவி, ஷியாமுக்கு நான் ஒரு இன்விடேஷன் அனுப்பியிருக்கேன். உன் சொந்த இன்விடே ஷன் அனுப்பி வச்சியா?"

"இல்லை. லெட்டருக்குப் பதில் போட்ட தோட சரி."

"இல்லை நிவிதா. ஒண்ணு அனுப்பி வச்சிடு. அதான் மரியாதை."

"எனக்கு இஷ்டமில்லை வினோத்."

"நானே அனுப்பும் போது நீ அனுப்பற துக்கு என்ன...? பரவாயில்லை. ஒண்ணு அனுப்பிடு."

தயக்கமாய்ச் சம்மதித்தாள்.

இரண்டு திருமணப் பத்திரிகைகளை யும் கைகளில் வைத்துக் கொண்டு, எதிரே உட்கார்ந்திருந்த தீபக்கைப் பார்த்துச் சிரித் தான் ஷியாம்.

"பார்த்தியா தீபக்! வினோத், நிவிதா ரெண்டு பேருமே கல்யாணத்துக்குக் கூப்பிட் டிருக்காங்க. இதைத்தான் ஒரு மாசமா எதிர் பார்த்து நான் காத்திருந்தேன்டா. என்னைக் குக் கல்யாணம்? வர்ற பத்தாம் தேதி காலைல. என்னைக்கு வரவேற்பு? மறுநாள் பதினோராம் தேதி சாயங்காலம். கல்யா ணம் திருச்சில. வரவேற்பு மெட்ராஸ்ல. சொல்லு தீபக், நான் திருச்சில வச்சிக்கட் டுமா, இல்லை மெட்ராஸ்ல வச்சிக்கட்டுமா?"

"எதைடா?"

"என் திட்டத்தை!" என்றான் ஷியாம், முகம் கடுமையாகி.

(தொடரும்)



நன்றி: சாவஞ்ச்.
ரசித்தவர்: மேனா.

"நீங்க எழுதின கதைகளில் உங்களா லேயே ஜீரணிக்க முடியாத கதை எது?"

"நான் சொந்தமா எழுதின கதைகள் தான்...."

— மணியன் தர்மலிங்கம்.





# டீ உலகில் உயர் வட்டம்

# சக்கரா டீ

உயர் வகுப்பினர் பாராட்டும்
தேநீர்ச் செல்வம் சக்கரா டீ.
சொகுசான சுவைமணம், திட
குணங்களின் முழுமை
வட்டம். தேநீரிலே
சுக போகத்தின் உயர்
வட்டம்: சக்கரா டீ.

உயர் வட்ட ரசிகர்களுக்கு
உயர் வளமுள்ள தேயிலை

## சக்கரா டீ






டாட்டா டீ லிமிடெட்
உலகிலேயே மிகப்பெரிய டீ கம்பெனி.

daCunha/TT/246/87/TM

# பூஜை செய்யும் ஒரு ரோபோ!

ரோபோ பூசாரி! கேட்க வியப்பாயிருந்தது; பார்த்த போதும் அப்படியே!

சுமார் இருபத்தைந்து அங்குல நீளம்; பதினைந்து அங்குல அகலம்; பன்னிரண்டு அங்குல உயரம். ஒரு பெட்டி போல இருக்கிறது. இதிலிருந்து கை ஒன்று நீட்டிக் கொண்டிருக்கிறது. இதுதான் ரோபோ பூசாரி!

பட்டனைத் தட்டினதும், சன்னமாய் நகர்ந்து போய், கையைத் தாழ்த்தி, ஊது வத்தி ஸ்டாண்டை எடுத்து, ஏற்றி, சாமி விக்கிரகத்தின் பக்கத்தில் வைக்கிறது. உதிரிப் பூவை எடுத்து அர்ச்சனை செய்கிறது; மாலையை எடுத்து அணிவிக்கிறது. கற்பூர ஆரத்தி காட்டுகிறது; மணி அடிக்கிறது. இத்தனை வேலைகளையும், இம்மி பிசகாது செய்து முடித்து விட்டுப் பின்னால் நகர்ந்து பழைய இடத்துக்கு வந்து சமர்த்தாக உட்கார்ந்து கொள்கிறது!

பார்க்கிறவர்களுக்குக் கண்கள் வியப்பால் விரிகின்றன. இந்த ரோபோவை உருவாக்கியவர் சுரேஷ் சபு. திருவனந்தபுரத்தைச் சேர்ந்த எலக்டிரானிக் இஞ்சினியர். பலவிதமான ரோபோக்களை உருவாக்குவது இவருக்குப் பொழுதுபோக்கு. ஒரு நாள் பூஜை செய்ய ஒரு ரோபோவை உருவாக்கினால் என்ன என்று தோன்றியது. உடனே அந்த முயற்சியில் ஈடுபட்டார். சில மாத உழைப்பின் பலனே இந்த ரோபோ பூசாரி.

சபு சொல்கிறார்: "இதை நான் உருவாக்கிய செய்தி, பத்திரிகைகளில் வந்ததும் கேரளாவில் ஒரு சர்ச்சை ஏற்பட்டது. 'பூஜை என்பது பக்தி பூர்வமானது. மனம் சம்பந்தமானது. இதற்கு ஒரு மெஷினை வைத்தால் பக்தியைக் கேலி செய்வதாகும்' என்று பலத்த எதிர்ப்பு. ஆனால் வேறு ஒரு சாரார், 'இன்று பல கோவில் பூசாரிகளுக்குச் சுயநலம்தான் மிஞ்சியுள்ளது. கோவில்கள் பணம் கறக்கும் இடங்களாகி விட்டன. பக்தி, வியாபாரமாகி விட்டது. எனவே, இதற்கு முற்றுப் புள்ளி வைக்க வந்துள்ள இந்த ரோபோவை வரவேற்க வேண்டும்' என்று பேசினார்கள். இன்னொரு சாரார் 'இதை ஒரு விஞ்ஞான அற்புதம் என்கிற நோக்கில் மட்டுமே பார்க்கப் பார்...

• சுரேஷ் சபு



வேண்டும். மற்றபடி, கோவில்களில் ரோபோவை நுழைப்பது பைத்தியக்காரத்தனம்' என்றனர்."

"சரி உங்கள் கருத்து என்ன?"

மூன்றாவது கருத்துதான் என் கருத்தும். இதிலே ஒரு விஷயம் கவனிக்க வேண்டும். கற்பூரம், பூ, தட்டு, மாலை, என்று அத்தனையும் அதனதன் இடத்தில் வைத்தால்தான், இந்த ரோபோ தவறின்றி வேலை செய்யும். சிறிது இடம் மாறி விட்டாலும் அவ்வளவு...ன். வேலை நடக்காது. இந்த ரோபோ என்று இல்லை... இன்றைக்கு உலகிலுள்ள மிக மிக அற்புதமான ரோபோக்கள் கூட இப்படித்தான். ஒரு முன்னேற்பாட்டின்படி செயல்படுமே தவிர, தானாகவே சிந்தித்துச் சமயோசிதமாக அவற்றால் செயல்பட முடியாது. அந்த விதமாகப் பார்த்தால் ரோபோக்கள் மூளைவளர்ச்சி குன்றிய குழந்தைகள் போலத்தான்."

பேட்டி — எஸ். சந்திரமௌலி

# "மூன்றாவது அணிக்கு முயற்சி செய்கிறேன்" — நெடுமாறன்



* காங்கிரஸ் அணி, தி.மு.க. அணி தவிர, மூன்றாவது அணி ஒன்று அமைப்பது பற்றித் தமிழக ஜனதா தலைவர் திரு. செழியன் அவர்களிடமும், அக்கட்சியின் அகில இந்தியத் தலைவர்களிடமும் விரிவாகவே பேசியுள்ளேன். மூன்றாவது அணியில் ஜனதா அங்கம் வகிக்க வேண்டும் என்பது தான் எனது விருப்பமும் வேண்டுகோளு மாகும். ஜனதா கட்சியிலும் இவ்வாறே பலரும் விரும்புகிறார்கள் என நம்புகிறேன். இது சம்பந்தமான பேச்சு வார்த்தைகள் தொடர்ந்து நடைபெற்று வருகின்றன. தேர்தல் தேதி அறிவிக்கப்பட்டவுடன் இறுதி முடிவுகள் எடுக்கப்படும். மூன்றாவது அணியில் சேர ஜனதாக் கட்சிக்குத் தகுதியில்லை என்று நான் ஒருபோதும் சொன்னதில்லை.

மதுரை — 1. ப. நெடுமாறன். தலைவர், தமிழ்நாடு காங்கிரஸ் (கா)

* ஜனதாவில் கோஷ்டிகள் கிடையாது. கூட்டணி சேர்வதில் ஒரு சிலரிடையே சிறிது கருத்து வேறுபாடு உள்ளது. அவ்வளவு தான். தமிழக அரசியலைச் சரியாக மேல் மட்டத்தில் எடுத்துச் செல்லாத காரணத்தால் அகில இந்திய ஜனதா கட்சித் தலைவர்களும் கொஞ்சம் தடுமாறிப் போயிருக்கிறார்கள் என்பதும் உண்மை. கருத்து வேறுபாடுகளைக் கோஷ்டிப் பூசல் என்று வர்ணிப்பது சரியல்ல.

கலைக்கப்பட்ட சட்டசபையில் மூன்று ஜனதா எம். எல். ஏ.க்கள் இருந்தனர். தங்களால் விடுபட்ட மூன்றாவது நபர் டாக்டர் குமாரதாஸ். தொகுதி கிள்ளியூர். கட்சியில் சொற்பத் தொண்டர்கள் இருப்பதாகத் தாங்கள் கூறியிருப்பது கண்டனத்துக்குரியதாகும்.

மூன்றாவது அணியை உருவாக்க ஜனதா கட்சியினர் ஜானகி அ.தி.மு.க., சிவாஜி கட்சி, நெடுமாறன், ஜனமோர்ச்சா பூவராகன் ஆகியோரை அணுகியதாகவும் அப்போது அவர்கள் "உங்களுக்கு ஓர் ஆதரவும் கிடையாது என்று முகத்திலடித்தாற் போல் கூறியதாகவும் எழுதுவது முற்றிலும் தவறு. மாறாக, அவர்கள்தான் தன்னைக் கேட்டதாகவும் அதற்குத் தன் கருத்தைக் கூறி விருப்பதாகவும் செழியன் வலியுறுத்தியுள்ளார்.

எந்தக் கட்சியோடும் ஜனதா கூட்டு சேர்ந்தால் கட்சியை விட்டு விலகி விடுவேன் என்று நெல்லை ஜெபமணி எந்த இடத்திலேயும் சொன்னது கிடையாது. தி.மு.க.வோடு கூட்டுச்சேர வேண்டும் கொடுத்த சீட்டை வாங்கிக் கொள்ள வேண்டும் என்று மதுதண்டவதே போன்ற சீனியர் தலைவர்கள் சொல்வதாகக் கூறுவது வேண்டுமென்றே அவிழ்த்து விடப்பட்ட பொய்ப் பிரசாரமாகும். ஜனதா தி.மு.க.வோடு எப்பொழுதும் கூட்டு சேரத் தயாரில்லை. ஒளிமயமான எதிர்காலத்தை நோக்கி வெற்றி நடை போடுகிறது ஜனதா கட்சி.

ஈரோடு — 9. எஸ். வி. துரைசாமி, தலைவர், ஈரோடு வட்டார ஜனதா கட்சி.

(ஜனதா கட்சி பற்றிய லம்பாஜியின் கணிப்பு சரியாக அமையவில்லை என்று சுட்டிக் காட்டும் வேறு பல கடிதங்களும் நமக்கு வந்துள்ளன. அவற்றில் ஏறத்தாழ இதே கருத்துக்களே இடம் பெற்றுள்ளன.

— ஆசிரியர்.)

* கல்கி 5.6.88 இதழில் நீங்கள் கேட்டவை பகுதியில் ஒரு பதில் தியாகிகளை ஏளனப் படுத்துவதாக அமைந்திருக்கிறது. இந்த பதிலைப் பார்த்து நான் மிகவும் வேதனைப் பட்டேன். இந்தக் கேள்வியைத் தவிர்த்திருக்கலாம். பதில் எழுதி பல தியாகிகளின் அதிருப்திக்கு ஆளாகி இருக்கிறீர்கள்.

சென்னை — 17. ஏ. நடராஜன்.

(சுதந்திரப் போராட்டத் தியாகிகளை இனம் கண்டு, அரசு அவர்களுக்கு இன்றையப் பொருளாதார சூழ்நிலைக்கேற்ப உதவி, அவர்களைக் கௌரவமாக நடத்த வேண்டும். ஆனால் தியாகிகளே தங்கள் தியாகத்துக்குச் சலுகைகள் காட்டப்பட வேண்டும் என்று கோரி ஊர்வலம் செல்வதும் பிரதிபலனை எதிர்பார்ப்பதும் காந்தியக் கொள்கைக்கு முரணானது. இந்த நிலைக்கு அவர்கள் அரசின் அலட்சியப் போக்கினால் தள்ளப்பட்டிருப்பது வருத்தத்துக்குரியது.

— ஆசிரியர்.)

* வி. பி. சிங் பற்றி கே. ஸ்ரீ. எழுதியிருந்த கட்டுரையைப் பார்த்தேன். வி. பி. சிங்கை அவர் பாராட்டி எழுதட்டும். வேண்டாம்

என்று சொல்லவில்லை. ஆனால், வி. பி. சிங்கை மகாத்மா காந்தியோடு ஒப்பிடக் கூடிய அளவிற்கு கே. ஸ்ரீ. தனது மனசாட்சியை எங்கே அடகு வைத்தார்?

சென்னை — 56, பூவை. விமலன்.

(விமலனைப் போலவே வேறு சிலரும் தப்பர்த்தம் செய்து கொண்டு எழுதியுள்ளனர். "மகாத்மாவுடன், அவரது செயல்முறைகளுடன் எதையும் ஒப்பிட முடியாது" என்று தெளிவாக எழுதிய பிறகு "மகாத்மாவை நினைவூட்டுகிறார் வி. பி. சிங்" என்றுதான் கே. ஸ்ரீ. குறிப்பிட்டிருக்கிறார்.

— ஆசிரியர்.)

* காங்கிரஸ் தேர்தலுக்குப் பிறகு ஆளுங்கட்சியாக இல்லா விட்டாலும் ஒரு நல்ல எதிர்க்கட்சியாக இருக்கலாம் என்பதை உறுதிப்படுத்துவது போலிருக்கிறது தலையங்கம். அதே சமயம், ஜெயலலிதாவுடன் கூட்டணி அமைத்தாலோ ஆளவும் முடியாது, எதிர்ப்புப் பணி ஆற்றவும் முடியாது என்ற உண்மையை வெளிப்படுத்தியது.

ஆத்தூர், ராஜ்பிரபு.

* அறிவியல் வளர்ச்சி காரணமாகப் பிறந்த திரைப் படம், அறிவு பூர்வமான சிந்தனைகளுக்கு எதிரான கருத்துக்களைப் பரப்பி வரும் அவலக்கேடுகளுக்கிடையில், இயக்குனர் அருண்மொழி 'காணி நிலம்', 'ஏர் முனை' போன்ற மசாலா மயக்கப் போதையற்ற தரமான படங்களைத் தர முன்வந்திருப்பது பாராட்டிற்குரியது என்றால் அப்படிப்பட்ட பாராட்டிற்குரிய வித்தியாசமானவரை நாலு பக்க பேட்டியின் மூலம் வெளிச்சத்துக்குக் கொண்டு வந்த எங்கள் கல்கியும் பாராட்டிற்குரியதே.

திருக்குவளை, வெற்றிப் பேரொளி.

* "இறுக மூடிய கதவுகள்" என்ற கதையில் வரையப்பட்ட படத்தில் க்ளுகோஸ் குழாய் மூக்கிற்குள் செல்கிறது! இந்த மிகப் பெரிய தவறு எப்படி ஆசிரியர் கண்களிலிருந்தும், ஓவியர் கண்களிலிருந்தும் தப்பிப் பிரசுரம் வரை வந்தது?

திருச்சி — 6, உஷா வாசன்.

* 'அவசரம்.... அவசரம்... குதியுங்கள்...' துணுக்குப் பகுதியைப் பிரசுரித்த உமக்குமா அவசரம்?! 'பாக்கி இருப்பது நாலு பாராசூட்கள்தான்' என்பதற்குப் பதில் 'பாக்கி இருபத்து நாலு பாராசூட்கள்தான்' என்று பிரசுரித்திருக்கிறீரே!

சின்னமனூர், எம். எஸ். தாசன்.

* 'நினைவுகளை வரிசைப்படுத்திய போது' 'வித்தியாசமான வெற்றிகள்', இரண்டு கதைகளும் இரு வேறுபட்ட கர்வங்கள் அடக்கப்பட்டதை வெவ்வேறு விதமாக உணர்த்தின. கதாசிரியர்களுக்குப் பாராட்டுக்கள்.

திருவாரூர், கோ. பாரி.

* 'கொஞ்சம் கொரிக்க' பகுதி சுவையாய் இருக்கிறது. தொடர்ந்து கொரிப்பதற்கு இதுபோல் ஏதாவது கொடுக்கவும்.

சென்னை — 33, வி. எஸ். வாசன்.

* நீலகிரிக்கு அழகு சேர்க்கும் இயற்கைவனத்தை அழித்து, மக்களின் பிரச்னைகளை அதிகமாக்கி... ஒரு தொடர்கதை போலத் தொடரும் இப்பிரச்னைகள் என்றுதான் ஒழியுமோ!

சிதம்பரம், க. இராஜேஷ்குமார்.





# ஓர் உதயத்தின் பொழுது

"இப்பவோ அப்பவோ" என்று ஒரு குரல் (கமெண்டோ) கேட்டது. நான் சிவுக்கென்று திரும்பிப் பார்த்தேன். கலகலவென்று சிரிப்பொலி. இடம் ஜெமினி பஸ் ஸ்டாப். நின்றிருந்தவர்கள் ஐந்து பேர் — இளைஞர்கள். பாவம்!

அவர்கள் என்னைச் சொல்லவில்லை. ஏன், என்னைக் கவனிக்கக் கூட இல்லை. அவர்கள் உலகில் அவர்கள் மூழ்கிக் களித்துக் கொண்டிருந்தார்கள்.

வரவர நான்தான் 'ஸென்ஸிடிவ்' ஆகி வருகிறேன். வயிறு நிறையத்தான் பருத்து விட்டது. எப்படிக் கட்டினாலும் புடைவை எங்கேயாவது வழுக்கிக் கொண்டு விடுமோ என்று பயம் ஒரு கோடியில் முழித்து முழித்துப் பார்க்கிறது.

அந்தப் பயம் போகட்டும்; அதைவிடப் பெரிசு பெரிசாய்—போன வாரம் 'டெண்ட்'டில் பார்த்த 'பால நாகம்மா' படத்தில் வரும் பிசாசுகள் மாதிரி — பயங்கள் கோரமாய்ப் பல்லிளிக்கின்றன.

பிரசவம் என்பது எப்படியிருக்கும்? அது எத்தகைய அனுபவம்? திடீரென்று எங்கேயாவது அது நேர்ந்து விடுமா? இடம் பொருள் ஏவல் பாராமல் விமானத்தில், பஸ்ஸில், ரயிலில், ஆட்டோவில், ஆபீஸில் என்று. அந்த ரகமான கதைகள் ஏதோ நான் விரும்பிக் கேட்டவை மாதிரி என்னை நோக்கியே எனக்காகவென்றே சொல்லப்படுகின்றன.



# விவேகி

குனிவதும் நிமிர்வதும் சிரமமாய் விட்டன. அவ்வப்போது வயிற்றில் புரள்கிறது. திடீரென்று சற்றும் எதிர்பாரா வேளையில் மானேஜர் எதிரில் நிற்கும்போது, பஸ்ஸில் ஒரு கையால் கண்டக்டரிடம் சில்லறை எடுத்துத் தரும் போது உள்ளே உதைக்கிறது. ஹம்மா! இப்பவும் உதை. இந்த உதை உதைக்கிறதே இது... ஆணா... பெண்ணா?

ஆணோ, பெண்ணோ, ஓர் ஆசீர்வாதம்!

வயிற்றில் வளர்கிறதே அது என்னை ஆசீர்வதித்திருக்கிறது. அப்படி நினைத்தால் எல்லா பயங்களும் பூத்துவிடுகின்றன. பொல்லென்று உதிர்ந்து போகின்றன.

''நீங்க மெடர்னிடி லீவுக்கு அப்ளை பண்ணிடுங்க மேடம்!'' என்று மானேஜரே சொல்லுமளவு ஆகிவிட்டது.

எனக்கு லீவு போடப் பிடிக்கவில்லை.

இத்தனை சிரமம், பயம் எல்லாவற்றைக் காட்டிலும் எனக்குக் கிடைத்திருக்கிற தாய்மைப் பதவியைக் கொஞ்சம் கொண்டாடிக் கொள்ள வேண்டும் போலிருக்கிறது.

இந்த உலகம் நான் தாயாகி விட்டேன் என்று தெரிந்து கொள்ளட்டுமே! ஆபீஸிலிருந்து இறங்கி ஜெமினி பஸ்ஸ்டாப் வந்து அங்கிருந்து வீடு போகிறவரை கொஞ்சம் பேருக்காவது என் கதை தெரியும். என் விவாகரத்து, அதன் காரணம், என் மறுமணம்... எனக்குத் தெரியாதா, இந்த ஜனங்களை?

அவர்கள் மத்தியில் நான் தாய் ஆகிவிட்ட பெருமிதத்தைக் கொண்டாடிக் கொள்ளத் தோன்றுகிறது. வக்கரிப்பு அல்ல. வஞ்சம் தீர்க்கிற மாதிரியோ, அலட்டிக் கொள்கிற பாணியிலோ கூட அல்ல.

அந்த பரிதாபத்திற்குரிய பழைய பால



கணேசனைப் பரிகசிக்கிற மாதிரியும் அல்ல —

பாவம் பாலகணேசன்! அவசரப்பட்டுட் டார். சந்தேகப்பட்டுட்டார். தன் மேல வந்திருக்குமோ? மே பி. எல்லா சந்தேகமும், எந்தச் சந்தேகமும், மொதல்ல தன் மேல படற சந்தேகம். தனக்கே கொழந்தை பொறக்காதோன்னு தோணி எம்மேல திரும்பின சந்தேகம்.

இப்ப நெனச்சா அதெல்லாம் ஒரு கனவில வாங்கின சம்மட்டியடி மாதிரி தோணறது. எனக்கு யார் மேலேயும் வருத்தமில்லே. எவர்கிட்டேயும் கோபம் இல்லே. மனசு பளிங்கு நீரோடை போல சாந்தியா இருக்கு. சந்தோஷமா இருக்கு. இதை அனுபவிக்க வேண்டாமோ?

வீல் போட்டுட்டு என்ன பண்ணப் போறேன்?

எத்தனை நாழி கட்டில்லே பொரண்டுண்டு கதை புஸ்தகம் படிச்சிட்டு இருக்கிறது? மாமியார், நாத்தனார் எல்லாம் தந்தி கொடுக்கிற தூரத்திலேர்ந்து கேபிள் கொடுக்கிற தூரத்துக்குப் போயாச்சு.

நீயாச்சு... ஒன் பயமாச்சுன்னு டாண்ணு ஒன்பது அடிச்சா இவரும் கௌம்பிடுவார். ஒன்பதுக்கு மேரி சரோஜா வருவா. வீட்டு வேலைக்காரி.

அவளுக்கு நாளைக்கு ஒருதரமாவது என்னைத் தொட்டுப் பார்க்கணும். மொகத்தை நீவுவா. தோளைப் பிடிப்பா. எங்கே காலைக் காட்டும்மான்னு புடைவைக் கரையை ஒதுக்கிக் காலை அமுக்கிப் பார்ப்பா. உப்பு வந்துடுமோன்னு அவளுக்கொரு பயம் — ஏன்?

சினேகம்! வீட்டுக்காரி வேலைக்காரின்ற எல்லைக்கோடு அப்பப்ப அழிஞ்சு போகிற சினேகம்! ஸ்பரிச வாஞ்சையிலே வழியற சினேகம். நேக்கு அதெல்லாம் பிடிக்கும். காட்டிக்க மாட்டேன்.

'நீ ரொம்பப் படுத்தறே மேரி'ம்பேன்.

''சும்மா இரும்மா. நாத்தி, மாமி இல்லாத பொண்ணு. ஆபீஸுக்குப் போறே. ஆம்பளைக்கு என்ன தெரியும்? அவங்க பெத்திருக்காங்களா, பார்த்திருக்காங்களா! கர்ப்பிணின்னா இன்னா பொருள்னு தெரியவா போவுது'' என்பாள்.

அவ சொன்னா நேக்குப் புல்லரிக்கும்.

மேரி சரோஜாவுக்கு என் கதை 'தரவ்'வா தெரியும். என் பயங்கள். என் ஏக்கங்கள். என் ஆசைகள்.

''வேலைக்காரியாண்டே ரொம்ப வெச்சுக்கறே!'' விரலை நீட்டி இவர் — ஜெகன் மோஹன்—எச்சரிக்கிறார்.

''வாண்டாம்னா சொல்லுங்கோ. 'ஐ'ல் ஸ்டாப்.''

''நோ, நோ! அப்படியெல்லாம் 'கட்' பண்ணச் சொல்லலே. இவ்வளவு ஓவரா வேணுமா...? அப்புறம் வேலைக்காரிக்குப் பயம் போய்டாதான்னேன். ஐ நோ யூ. உன் உள்ளுணர்வு சரியாத்தான் இருக்கும். இது அன்யூஷுவலா இருக்கிறதால நேக்கு



அப்படிப் பட்டது'' என்று பின்வாங்கி விடுவார்.

ஆரம்ப நாட்கள்லே சமூகமும் பாலகணேசனும் கீறிவிட்ட ரணங்கள் நேக்கு ஒரு ஆபரேஷன் புத்தியை ஏற்படுத்திடுத்து. இப்ப நெனச்சா நேக்கே வெக்கமாயிருக்கு. சே நாமா இப்படி! அதுவும் கத்திக்குத் தாங்காத வெண்ணெய் மாதிரி ஜெகனையான்னு சிரிச்சுப்பேன்.

''மிஸ்டர் ஜெகன், நான் சம்பாதிக்கறேன்னு தானே என்னைக் கட்டிண்டேள்?''

''அப்படி வச்சுக்கயேன். நேக்கென்ன கொறஞ்சுடப் போறது!''

''நீங்க ரொம்ப முற்போக்குன்னு நெனப்போ?''

''ஹௌ ஸெட் ஸோ?''

''விதவைத் திருமணம் பத்தி பேசறளே! எவனையாவது பாத்துப் பண்ணிக்கறது... எதுக்கு ஒரு விவாகரத்து கேஸைப் பிடிச்சேள்?''

''கெடைச்ச விதவைங்களை விட ஒன்னை நேக்குப் பிடிச்சது.''

''வாட் இஃப்? நான் மறுபடியும் என்னோட பர்ஸ்ட் ஹஸ்பெண்டை மீட் பண்ணி, அவரையே திரும்பக் கல்யாணம் பண்ணிக்கிறதுக்காக உங்களை டிவோர்ஸ் பண்ணிடறதா வச்சுக்குங்க. நீங்க தாங்கிப் பேளா?''

குலுங்கிக் குலுங்கிப் புரையேறுகிற மாதிரி ஜெகன் சிரித்து விட்டார். தலையைத் தட்டிக் கொண்டு சிரிப்பு கண்ணில் நீராக வழிய, அந்த முகம் இன்னும் ஞாபகத்திலே இருக்கு.

''சீரியஸா கேக்கறேன்.''

''தோ பாரும்மா. நம்மால இதுக்கு மேல சிரிக்க முடியாது. நீ பாவம் அவலை நெனச்சு ஒரலக் குத்திண்டிருக்கே!''

''என்ன சொல்றேன்?''

''ஒரு ஆம்பிளை ஒங்கிட்டே தப்பு செஞ்சுட்டாங்கறதுக்காக ஆண்குலத்தோடேயே போருக்கு நின்னுண்டிருக்கே! இந்தக் கண்ணை, இந்த மூக்கை, இந்த ஒதட்டை வெச்சுண்டு...

அப்புறம் என்ன செய்ய?

ஜெகன் எனக்கு அன்பை, காதலை, உணர்த்தினார். நான் மிகைப்படுத்தலே.

"பொண்ணோட அப்பா வட்டிக் கடை வச்சிருக்காரா?"

"ஏன் கேக்கறீங்க?"

"மொய் எழுதாதவங்ககிட்ட புரோ நோட்டு எழுதி வாங்கிக்கிட்டிருக்காரே!"

— மேல்மங்கலம் பத்ரா.

நேசம்னா எதுன்னு அவர்கிட்டத்தான் கத்துண்டேன். ஒரு இதயத்துக்குள்ள நொழையறதுன்னா என்னன்னு கத்துண்டேன். பேச்சு இல்லாமே, நிசப்தமா, நிர்மால்யமா.

நேத்திக்கோ முந்தா நாளோ ஆபீஸ் கேண்டீன்ல அப்பளாம் விக்கறவர், நான் டோக்கன் வாங்கிண்டிருக்கச்சே மொதல் டேபிள்ள யாரண்டையோ பேசிட்டிருந்தார்.

"பால கணேசன் செகண்ட் டெலிவரி டயம். இப்ப போய் ஜாண்டிஸ் வந்துருக்கு. கேஸ் தேறாதுங்கறா. நேத்திக்கு அவா ஆபீஸ் போனேன். அவரைக் காணலே. விசாரிச்சதுக்கு விவரம் சொன்னா."

நான் திரும்பிப் பார்த்தேன்.

அவா என்னைக் கவனிக்கலே. டிபன் சாப்பிடறச்சே பேசற ஊர் வம்புதான் அது. குத்திக் காட்டணும்னோ காதுல விழணும்னோ சொன்னதில்லே.

பாலகணேசன் என்ன நினைப்பார்? 'ஒருத்தி வயத்தெரிச்சலை, ஊரறிய, கோர்ட் டேறிக் கொட்டிண்டோம். பகவான் பழி தீர்த்துண்டான்னு நெனைப்பாரோ?

ஆமா! ஐ நோ ஹிம்.

அவரை நேக்குத் தெரியும். மடத்தனமா பரம சண்டாளமா ஏதாவது தப்பைப் பண்ணிட்டுத் தலையைத் தலையை அடிச்சுப்பார். அதுக்காக அப்பறமும் அந்தத் தப்பைப் பண்ணாம விட்டிருவாரோ? ஊஹூம்.

இவாளை சிருஷ்டிக்கறச்சே பகவான் டெஸ்ட் டியூபிலே பாதரசத்தை ஊத்திப் பரிசோதனை பண்ணியிருப்பாரோ!

என்னது... இன்னிக்குன்னு பாத்து 25! இத்தனை நாழியாக் காணோம்!

ஹம்மா... வயத்துக்குள்ளார இதென்ன பயங்கர வலி... யப்பாடி.

சடார்னு அந்தப் பழைய பயம்.

இந்தக் கூட்டத்திலே ஏறி டல்ல ஏதானும் ஆயிடுமோ... மானேஜர் பேச்சைக் கேட்டிருக்கணுமோ?

"அப்பளாம்... பப்படம்..."

நான் திரும்பவில்லை.

"மேடம் அப்பளாம் வாங்கல்லியோ?"

அவர் என்னருகில் வந்து நிற்கிறார்.

"அட நீங்களா மேடம்!"

நான் மெலிசாய்ச் சிரிச்சேன்.

"மிஸ்டர் பால கணேசன் சமாசாரம் கேள்விப்பட்டிருப்பேள்"

"வேறே ஏதாவது பேசுங்க சார்!"

"எக்ஸ்க்யூஸ் மீ. தப்பா நெனைச்சுக்கப் படாது. ஒங்க வயத்தெரிச்சல் கொட்டிண்டதுக்கு அனுபவிக்கிறார்."

"சார், ப்ளீஸ்."

அவர் ஓயவில்லை. ஓயும் உத்தேசமில்லை.

"செகண்ட் ஒய்ஃபுக்குப் பிரசவ டயத்திலஜாண்டிஸாம். ஒங்களைப்படுத்தினேனே படுத்தினேனேன்னு தலை தலையாய் அடிச்சுக்கறார். நர்ஸிங் ஹோம் மாத்தியாச்சு. அரை மணி மின்னாடி பார்த்துட்டு வந்தேன்.

"எந்த நர்ஸிங் ஹோம்?"

"கல்யாணி. நீங்க போய்ப் பார்த்தேள்னா அவருக்கு ரொம்ப ஆறுதலாயிருக்கும்."

"வெளையாடறேளா?"

"நோ, நோ, சத்தியமாச் சொல்றேன்! நீங்க ஏதோ சாபம் கொடுத்துட்ட மாதிரி பொலம்பிண்டிருக்கார். அப்படியெல்லாம் இல்லேன்னு நிரூபிக்கிறாப்பல போய்ப் பார்த்துட்டு வந்தேள்னா..."

நான் யோசிச்சேன்.

இருக்கிற வலியையும் வேதனைகளையும் மறந்து அவரைப் பார்த்துச் சுடச் சுடக் கேக்கணும் போல ஒரு ஆத்திரம்.

"நீங்களும் வர்றேளா?"

"ஓ. எஸ்!"

ஓர் ஆட்டோவைக் கைதட்டி நிறுத்தினேன். ஏறி உட்காரும்போது மனசு குளிர்ந்துட்டது. சே, பாவம்! முட்டாள் மனுஷர். அவர்கிட்டே சண்டை போட்டுக்க என்ன பாக்கிஇருக்கு? நான் ஏன் போகணும்? போகணுமா?. நல்ல மனசோட ஒரு வெல்விஷர் மாதிரி போனாத்தான் என்ன?

மிஸ்டர் பாலகணேசன்! இன்னும் பிதற்றிண்டு இருக்க வேண்டாம். பாரும், நானும் தாய் ஆயிட்டேன். ஒரு தாய் வேற எவளும் நாசமாய்ப் போயிடணும்னு வேண்டிக்க மாட்டான்னு சொல்லிட்டு வரணும்.

ஆட்டோ கௌம்பிடுத்து.

வண்டி ஜெமினி பாலம் ஏறச்சே என் பயம் எங்கேயோ போயிடுத்து.

கொஞ்ச நாழிக்கு முந்தி வந்த சின்னக் கோபம் கூடக் குறைந்துடுத்து. பகவானே... தப்பித் தவறிப் பாலகணேசன் சம்சாரத்துக்கு எதுவும் ஆயிடப்படாது. காப்பாத்து. அந்த ஆளுக்குப் பைத்தியம் பிடிச்சுடும். காப்பாத்துன்னு வேண்டிண்டுட்டேன்.

ஹம்மா... மறுபடியும் அந்த வலி.

வயத்திலே ஒதைக்கிற ஜீவனே! சித்த நாழி பொறு... எந்த மனசிலேயும் கொதிப்போ, தவிப்போ இல்லாம நீங்கிடட்டும். நீ உதிக்கிற வேளை சுபவேளையா இருக்கட்டும். சித்த நாழி பொறுத்துக்கோ... சித்த நாழி.

# இருள் வரும் நேரம்

## 11

ராம்பிரகாஷ் டிஎஸ்பி சோமசேகரைப் பார்த்து நம்பிக்கையில்லாமல், ''நீங்க என்ன சொல்றீங்க? என் மனைவி போலீஸ் ஸ்டேஷனுக்கு வந்து கேடிங்களை அடையாளம் காட்டணுமா?'' என்று கேட்டார்.

''ஆமாம்'' என்றார் சோமசேகர்.

வேதாசலம் குறுக்கிட்டார். ''என்ன ஸார், என் பெண் பட்ட அவமானம் போதாதா? அதோடு கேடிங்க மத்தியிலே வந்து...''

''ஸார், உங்களுக்குக் குற்றவாளியைக் கண்டுபிடிக்க, தண்டனை கொடுக்க விருப்பமில்லையா?''

ராம்பிரகாஷ் தீர்மானமாக 'இல்லை' என்றார்.

''ஸார், நீங்க சொல்லுங்க. உங்க டாட்டர் தானே? அவங்களை இந்த மாதிரி அவமானத்துக்கு உள்ளாக்கினவனுக்குத் தண்டனை கொடுக்காம விட்டுர்றதா?''

''நீங்க என்ன வேணா செய்யுங்க. எங்களை இனிமே தொந்தரவு செய்யாதீங்க.''

''ரொம்ப நெகட்டிவ் ஆட்டிட்யூட் ஸார் இது. நாங்க என்ன கண்டுபிடிச்சு, என்ன பண்ண முடியும் சொல்லுங்க...?''

''இருட்டில முகத்தைக் கூட என் மனைவி பார்த்ததில்லை.''

''அப்படியா சொன்னாங்க?''

''அப்படித்தான்!''

''அவங்க சொன்னாங்களா...?''



''ஆமாம்!''

''அவங்களைக் கேக்கலாமா நானு...?''

''மிஸ்டர் சோமசேகர்! இப்ப நீங்க போறீங்களா...!''

''கொஞ்சம் ஒத்துழைச்சா...''

''என்ன ஒத்துழைக்கணும்?'' என்று அம்ரு அடுத்த அறையிலிருந்து வெளியே வர, சோமசேகர் எழுந்து மரியாதையாக நின்றார். ''குட் ஈவினிங் மிஸஸ் ராம்பிரகாஷ்'' என்றார். டாக்டரும், அம்ருவின் தந்தையும் சற்றே அதிர்ச்சியுடன் பார்த்துக் கொண்டிருக்க, அம்ருதா, ''என்ன வேணும் உங்களுக்கு?'' என்றாள்.

''முதல்ல ஒண்ணு தெரியணும். நடந்தது என்னவோ நடந்து போச்சு. இதனால் பலத்த மனக்காயம்தான்; ஒப்புக் கொள்றோம். இருந்தாலும், உங்களுக்கு அத்தனை தீங்கு இழைத்தவனை... இப்படிப்பட்ட மன வருத்தம் தந்தவனைச் சும்மா விட்டுடணுமா? தண்டனை கொடுக்கணுமா? சொல்லுங்க.''

''தண்டனை கொடுக்கணும்!'' என்றாள் அம்ருதா.

''அம்ரு!''

''இருங்க.... அப்படி தண்டனை கொடுக்கறதுக்கு உங்க ஒத்துழைப்பு வேண்டும். ஆட்டோ ரிக்‌ஷாக்காரங்க சுமார் பத்துப் பேரைச் சந்தேகப்படறோம். அவங்களை நீங்க பார்த்து யாருன்னு அடையாளம் காட்ட முடிஞ்சால் நல்லது. விவரம் மேற்கொண்டு நாங்க பார்த்துப்போம்.''

''என்ன பார்த்துப்பீங்க?''

''குற்றத்தை ஒப்புத்துக்க வெச்சுரலாம். பயப்படாதீங்க. நீங்க அவங்களைப் பார்க்கலாமே தவிர, அவங்களால உங்களைப் பார்க்க முடியாது.''

''அம்ரு; அதெல்லாம் தேவையில்லைம்மா.''

அம்ருதா, பிடிவாதமாக, ''தேவைதான்! ஸார், எனக்குச் சம்மதம்தான் — எப்ப வரணும், சொல்லுங்க?'' என்றாள்.

''இப்பவே.''

ராம்பிரகாஷ் பதற்றத்துடன், ''ஸார், சோமசேகர்! ஒரு நிமிஷம்...'' என்று அவரை வாயிற்பக்கம் அழைத்துச் சென்றார்.

''கொஞ்ச நாட்களாகவே இந்தச் சம்பவம் நிகழ்ந்ததில இருந்து என் மனைவி கொஞ்சம் க்ராங்கியா நடந்துக்கறா. முதல்ல பேப்பர்ல செய்தி வந்ததுக்காக ரொம்ப வருத்தப்பட்டா. அப்புறம் போலீஸ் மூஞ்சியிலேயே விழிக்க மாட்டேன்னா. இப்பவானா உங்க கூட வர்றேன்கறா. அவ இப்ப இருக்கிற மனநிலையில அவளால ஒரு ஐடெண்டிட்டி பரேடில் அடையாளம் கண்டு சொல்ல முடியுமாங்கறது சந்தேகம். தப்பா யாரை

சுஜாதா



யாவது காட்டிட்டு, நீங்க பாட்டுக்கு ஒரு நிரபராதியைக் காச்சு காச்சுன்னு காச்சி...''

''அதெல்லாம் நடக்காது ஸார்.''

''அவ வர மாட்டா'' — இப்போது குரலில் வலிமை தெரிந்தது.

''சரின்னு சொன்னாங்க.''

''என் அனுமதியில்லாம அவளை நீங்க அழைச்சுக்கிட்டுப் போயிட முடியுமா?''

''முடியாதுதான். இருந்தாலும், நீங்க ஒத்துழைச்சா...''

''எப்ப ஒத்துழைக்கறதுங்கறது எனக்குத் தெரியும்.''

அம்ரு அப்போது வாயிற்பக்கம் வந்து நின்றாள். ''நீங்க எப்ப என்னை அழைச்சுக்கிட்டுப் போவீங்க? எனக்கு அவனைப் பகல் நேரத்திலே பார்க்க ஆசை. பார்த்து, கன்னத்தில இரண்டு அறை... அப்புறம் அப்படியே அவனைக் கிழிச்சு...''

''அம்ரு, அவர் நாளைக்கு வருவார்.''

''ஏன் இப்ப போக முடியாதா?''

சோமசேகர் ஒரு தீர்மானத்துக்கு வந்தவர் போல, ''மிஸஸ் ராம்பிரகாஷ், இப்ப கூட பரேடுக்குப் போகலாம். ஆனா, உங்க கணவர் தான் உங்களை அனுப்ப மாட்டேங்கறார்.''

''அப்படியா?''

அம்ருதா தன் கணவனைக் குற்றம் சாட்டும் வகையில் பார்த்தாள். ''என்னைக் காப்பாத்தலை நீங்க. போலீஸுக்காவது உதவலாம்னா அதுக்குக் குறுக்கே வர்றீங்களே?''

ப்ரொபஸர் தமக்கு வந்த கோபத்தை அடக்கிக் கொண்டு பேசினார்: ''அம்ரு, நீ இப்ப அதுக்குத் தயாரா இல்லை. டாக்டர் பத்மினி சொன்னா. உன்னை இந்த மனநிலையிலே அந்தச் சூழ்நிலைக்கு 'எக்ஸ்போஸ்' பண்ணினா இன்னமும் மனசு வாடிப் போய்...''

''அதெல்லாம் சும்மா கதை. இந்த மாதிரி சொல்லிச் சொல்லியே ப்ரொபஸர் என்னை வீட்டு வாசப்படி தாண்டாம பத்திரமா வெச்சிருக்கார் ஸார். நானும் பைத்தியக்காரி மாதிரி இவர் சொன்னதுக்கெல்லாம் தலை ஆட்டிக் கொண்டு வீட்டோடேயே கிடந்திருக்கேன்.''

சோமசேகர் ப்ரொபஸரைப் பார்க்க, அவர் அலுப்புடன், ''ஆல்ரைட், நீ போய்ட்டு வாம்மா. உன்னை நான் எந்த விதத்திலே

யும் கட்டுப்படுத்த விரும்பலை,'' என்றார்.

''நான் மட்டும் எப்படித் தனியாப் போவேன்? நீங்களும் வந்தாகணும். அன்னைக்குத் தனியா விட்டுட்டுப் போய் நான் அல்லல்பட்டது போதும்.''

''பார்த்தீங்களா ஸார்! என்ன ஒரு 'இம்பாஸிபிள்' உமன் உங்க டாட்டர்னு?''

வேதாசலம் சமாதானமாக, ''இந்த வேளையில கொஞ்சம் அப்படித்தான் இருப்பா. டோண்ட் மைண்ட் ஹர்'' என்றார்.

''வர்றீங்களா?'' என்றார் சோமசேகர்.

''இவர் ஒருத்தர்ப்பா'' என்று முணுமுணுத்துக் கொண்டே ராம்பிரகாஷ் புறப்பட ஆயத்தமானார்.

கமிஷனர் அலுவலகத்தின் பின்பகுதிக்கு அவர்கள் மூவரும் அழைத்துச் செல்லப்பட்டனர். சோமசேகர் முன்னால் ஜீப்பில் வர அவரைத் தொடர்ந்து ராம்பிரகாஷ், வேதாசலம், அம்ரு மூவரும் மாருதியில் வந்தனர். மாலை மழை வருவதற்கான ஆயத்தமாகக் காற்று வீசி, மேகங்கள் லேசாகச் செருமின. ஒயர்லெஸ் நிலையத்திலிருந்து ஓர் அதிகாரி வந்து சோமசேகரிடம் ஒரு செய்தியைக் கொடுக்க, அவர் அதைப் படித்துவிட்டு, ''இதோ ஓர் அரை மணியிலே வர்றேன்பா; ரிப்ளை அனுப்பிச்சுடலாம். விபி கிட்ட சொல்லிடு'' என்றார்.

''...வாங்கம்மா'' என்றார் அம்ருவிடம்.

அம்ரு பதற்றத்துடன் அவர் அறைக்குள் சென்று உட்கார, வாயிலில் பலர் அவரைப் பார்க்கக் காத்திருந்தார்கள். ராம்பிரகாஷ், ''இது, சீக்கிரம் முடிச்சுட்டா நல்லது'' என்றார். பல கான்ஸ்டபிள்கள் உள்ளே வந்து விறைப்பாக சல்யூட் அடித்து விட்டு அவரிடம் ஃபைல்களில் கையெழுத்து வாங்கிக்கொண்டு சென்றனர். அவர் மேசைமேல் இருந்த டெலிபோன் ஒலித்துக் கொண்டிருந்ததைக் கவனிக்கவே இல்லை.

டிஎஸ்பியின் அறைக்குப் பின்புறத்தில் இருந்தது அந்த அறை. சிவப்பாகக் கயிற்றுப் பாய் விரித்திருந்தது. சன்னல் போல ஒரு பகுதி அடுத்த அறையைப் பிரித்தது. அந்த அறையில் வெளிச்சம் அதிகமாக இருக்க இந்த அறை பாதி இருட்டில் இருந்தது. ''மிஸஸ் ராம்பிரகாஷ், இங்கிருந்து பார்த்தா, அந்த ரூம்ல இருக்கிறவங்க யாரும் உங்களைப் பார்க்க முடியாது. சோதிச்சுப் பார்க்கிறீங்களா, வேணும்னா?'' என்றார்.

''வேண்டாம்.''

''இப்ப அஞ்சு அஞ்சு பேரா ரெண்டு பேட்ச ஆளுங்களா அழைச்சுக்கிட்டு வருவோம். அவங்களைப் பார்த்து அடையாளம் சொல்ல முடியுமா, பாருங்க.''

''சரி'' என்றாள் அம்ரு. அவள் கரங்கள் லேசாக நடுங்குவதை ராம் கவனித்தார். அவளை அணுகி, ''பயப்படாதே, அம்ரு. நான் கூடவே இருக்கேன்'' என்று கையைப் பற்றித் தடவிக் கொடுக்க, வேதாசலமும் அவள் முதுகைத் தடவிக் கொடுக்க, ''உட்காருங்க, ரிலாக்ஸ்டா இருங்க. இதிலே ரிஸ்கலா எதுவும் இல்லை. எதிலேயும் கையெழுத்துப் போடவோ, ஸ்டேட்மெண்ட்டு கொடுக்கவோ, வேண்டாம்.'' என்றார் சோமசேகர்.

அப்போது முதல் ஐந்து இளைஞர்கள் அறைக்கு உள்ளே கொண்டு வரப் பட்டார்கள். ''ஏனு ஸார், இது அன்யாயா'' என்று ஒருத்தனும் மற்றொருத்தன் முறைப்பாகக் கழுத்தில் கர்ச்சீப் கட்டிக் கொண்டும், ஒருத்தன் சிரிப்பாகவும், ஒருத்தன் சந்தேகப் பார்வையாகவும், ஒருத்தன் பயப் பார்வையாகவும் இருந்தான். ஐவரும் இளைஞர்கள். ஒருத்தன் காக்கிச் சீருடையில் இருந்தான். சற்று நேரம் திக்கு தெரியாமல் மேலும் கீழும் வாயிற்பக்கமும் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அம்ரு அவர்களைப் பார்த்த போது தன் கணவனின் கையை இறுகப் பற்றிக் கொண்டாள்.

''என்ன அம்ரு...?'' என்றார் டாக்டர்.

''சொல்லுங்க இவங்கள்ள யாராவது...?''

''சொல்லு அம்ரு...''

அம்ரு சற்று நேரம் கணவனைப் பிரமிப்புடன் பார்த்தாள்.

''என்ன...?''

''யாரைப் பார்த்தாலும் அவன் மாதிரி இருக்கு!''

டாக்டர் ராம்பிரகாஷ் சோமசேகரைப் பார்த்து, ''கேட்டீங்களா? நான் சொன்

---

**நிருபர்: ''நீங்க ஏன் அரசியலில் குதிக்கிறீங்க?''**

**காபரே நடிகை: ''எவ்வளவு நாளைக்குத்தான் சினிமாவில் குதிக்கிறதுன்னுதான்!''**

**— இளை. அ. கதிர்வேல்.**





**''ரெண்டு தலைவர்களும், தமிழ்நாடு மேப்பை வச்சுக்கிட்டு என்ன பண்றாங்க...?''**

**''அவங்க நிற்கப் போகிற தொகுதி எந்தப் பக்கம் இருக்குன்னு தேடுறாங்க!''**

**— கரடிகுளம் ஜெயாபாரதிப்ரியா.**

# N.S.K. பில்டர்ஸ்

## டெபாசிட்சேகரிப்பு காலம்!

**25.5.88 முதல் 25.8.88 வரை**
**நில உத்திரவாதத்துடன் கவர்ச்சிகரமான வட்டி விகிதங்கள்.**

ஐந்து வருட டெபாசிட்டுகளுக்கு இலவச பரிசுகள்

| | பணம் (அ) பொருள் | |
|---|---|---|
| ரூ. 5,000 | ரூ. 150/- | டான்டி பிளாஸ்க் (1 லிட்டர்) |
| ரூ. 10,000 | ரூ. 300/- | கேசரோல் டுவின் பேக் |
| ரூ. 25,000 | ரூ. 750/- | வாட்டர் பில்டர் |
| ரூ. 50,000 | ரூ. 1500/- | சுமித் கிச்சன் மிஷின் |
| ரூ. 1,00,000 | ரூ. 3000/- | ஸ்டீல் அல்மிரா |



| 1 வருடம் | 2 வருடங்கள் | 3 வருடங்கள் | 5 வருடங்கள் |
|---|---|---|---|
| 16% | 17% | 18% | 20% |

வருட வட்டிக்கு 1% கூடுதல் போனஸ் குறிப்பிட்ட காலத்துக்குள் டெபாஸிட்டை செலுத்தி பயனடையும்படி கேட்டுக் கொள்கிறோம்.

## N.S.K. நகர் திருநின்றவூர்

**M.M.D.A. அங்கீகாரம் பெற்றது எண்: PPD/L0 10/87**

**அனைத்து வசதிகளும் நிறைந்த குடியிருப்புக்கு மிகச் சிறந்த இடம்.**

**ஒரு மனையின் விலை ரூ. 20,000/-**

வங்கி ஊழியர்கள் கவனத்திற்கு!

N.S.K. நகரில் 500 சதுர அடி முதல் 800 சதுர அடிகள் அளவு உள்ள 2 படுக்கை அறைகளுடன் மிகச்சிறந்த முறையில் கட்டப்பட்ட வீடுகள் உள்ளன. விலை ரூ. 1.25 இலட்சம் முதல் ரூ. 2 இலட்சம் வரை. 1 சதுர அடி விலை ரூ. 250/- உடனே அணுகவும்.

அடுக்கு மாடி குடியிருப்புகள்:

அனைத்து நவீன வசதிகளுடன், இன்றைய நாகரீக நடைமுறைக்கேற்றவாறு கட்டப்படும், அடுக்குமாடி குடியிருப்புகள் (Flats) விசாலமான நுழைவாயில் 24 மணிநேரமும் தங்கு தடையில்லாத மின்சாரம் மற்றும் தண்ணீர் சப்ளை. 2 படுக்கை அறைகளுடன் 750 சதுர அடி உள்ளது. 1 சதுர அடி விலை ரூ. 200/- முன்பணம் செலுத்தி உங்களுக்கு தேவையான அடுக்கு மாடி குடியிருப்பை தேர்ந்தெடுத்திடுவீர்.

மாதிரி வீடுகளை (மினியேச்சர் மாடல்) எங்கள் அலுவலகத்தில் பார்வையிடலாம்.




**N.S.K. ரியல் எஸ்டேட்ஸ்**
38-B, பர்கிட் சாலை (முதல்மாடி). தி. நகர், சென்னை-600 017.
தொலைபேசி எண்: 445252, 442106

EXELADS/NSK/110/88 TML

னேனே எம் பேச்சைக் கேட்டீங்களா? இவ ஐடெண்டிபை பண்ற நிலையில இல்லை ஸார்!'' என்றார்.

''ஒரு நிமிஷம்! மிஸஸ் ராம்பிரகாஷ்! நீங்க ஏன் அப்படி நினைக்கறீங்க?''

''இவங்க எல்லாரும் ஒரே மாதிரித்தான் இருக்காங்க.''

''இருக்கலாம். இது கொஞ்சம் டிஃபிகல்ட்டுதான். இருந்தாலும்... அவங்களைப் பேசச் சொல்லட்டுமா? குரல் ஞாபகம் இருக்குமா?''

''தமிழ் பேசினான்.''

''அந்த பேரும் தமிழ்தான் பேசுவாங்க! கான்ஸ்டபிள் அவங்களைப் பேச வைங்கப்பா!''

''யோவ்! பேசுங்கப்பா.''

அவர்கள் ஒருவரை ஒருவர் பார்த்துச் சிரித்து, ''பேசிக்கிட்டுத்தான் இருக்கோமே!'' என்றனர்.

''இல்லை! ஏதாவது தொடர்ந்து ரெண்டு மூணு வாக்கியம் பேசுங்கடா...'' என்றார்.

அவர்கள் மௌனமாக இருக்க —அதட்டினார்கள்.

''என்ன பேசறது?''

''எம். ஜி. ஆர். வாள்க'' என்றான் ஒருத்தன்.

மற்றவர்கள் எல்லோரும் ''எம். ஜி. ஆர். வாள்க'' என்றனர்.

''இல்லைடா இப்படிப் பேசுங்கடா! 'அம்மா, உங்களை வீட்டாண்டை ஆட்டோவிலே கொண்டு விட்டுரலாங்களா?'ன்னு சொல்லுடா, சாவு கிராக்கி!''

''அம்மா உங்களை வீட்டாண்டை கொண்டு ஆட்டோவிலே... அப்புறம் என்ன சொன்னீங்க?''

''நாசமாப் போச்சு!''

''நாசமாப் போச்சு!'' என்று சிரித்தான்.

கோபம் கொண்ட கான்ஸ்டபிள் அவன் ருகில் வந்து தாடையை ஒரு கையால் பிடித்து அழுத்தினான்: ''என்னய்யா! போலீஸ் கிட்டே உடுகாட்டா ஆடறியா?'' கொஞ்சம் கொஞ்சமாக அவன் கழுத்தை உயர்த்திக் கொண்டே போய் ஒரு தள்ளு தள்ளினான். அவன் தன் முகவாயைத் துடைத்துக் கொண்டான். கண்ணில் கண்ணீர் தென்பட்டது. இருமினான்.

''அடுத்த அந்த பேரைக் கொண்டாய்யா, சீக்கிரம் முடிச்சுரலாம்'' என்றார் சோமசேகர்.

பாபு என்று செல்லமாக அழைக்கப்பட்ட ஜெயசங்கரும், 'தாஸ்' என்றும், 'கடி' என்றும், 'பால்குண்டு' என்றும் அழைக்கப்பட்ட ரத்தினவேலனும் சந்திரசேகரின் கராஜில் ராத்திரிக்கு ஆட்டோ எடுக்கச் சென்றபோது, மானேஜர், ''டேய், உங்க ரெண்டு பேத்தையும் போலீஸ்ல வரச் சொல்லியிருக்காங்க!'' என்றார். அவர்கள் இருவரும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொள்ள, ''ஏதோ கபன் பார்க்கில கற்பழிப் பாயிருச்சில்ல... நம்ம கம்பெனி ஆட்டோதான்னு யாரோ ஒரு மகன் அடையாளம் சொல்லப் போயி, ஒவ்வொரு ஆட்டோ டிரைவரா விசாரிச்சுக்கிட்டு வர்றாங்க!''

''அப்படியா? தாங்க்ஸ்ங்க அண்ணே.''

அவர்கள் ஆட்டோவைத் தெருவில் கொண்டு வருவதற்கு முன் காற்றின் அழுத்தத்தைச் சரி பார்க்கும்போது, ''டேய் பால் குண்டு, மாட்டிக்கிடுவோமா?'' என்றான் பாபு.

''ஹ! என்னைப் பிடிக்க அமெரிக்காவிலேர்ந்து போலீஸ் வந்தாலும் முடியாது!'' என்றான் பால்குண்டு.

''கொஞ்ச நாள் தலைமறைவா இருக்கலாம்.''

(தொடரும்)

## அடியேய் அடிக்காதே!

வக்கீல்: இருபது வருஷமா உங்க மனைவி அடிக்கிறதா, சண்டை போடறதாச் சொல்றீங்க. இப்பொழுதுதான் விவாகரத்து கேக்கறீங்க?

அவர்: இப்போ எல்லாம் குறி பார்த்து அடிக்கக் கத்துக்கிட்டா!

— ஆனந்த ராவ்.



''மக்கள் தீர்ப்பே மகேசன் தீர்ப்புன்னு தலைவர்கிட்டே சொன்னேன்!''

''என்ன சொன்னார்?''

''அந்த மகேசனைக் காசு கொடுத்து நம்ம பக்கம் இழுக்க முடியுமான்னு கேட்கிறார்...''

— மணியன் தர்மலிங்கம்.





* பிரதமராகத் தகுதி!

# ஜெயலலிதா பிரதமர் பதவிக்குத் தகுதியானவராமே?

* மு. ரா. பாலாஜி, கோலார் தங்கவயல்.

? இன்றைய தமிழ்நாடு காங்கிரஸில் அம்பிகா, தீபா, ஸ்ரீதேவி இவர்களில் யாருக்குச் செல்வாக்கு?

! ஹூம், காங்கிரஸுக்கே செல்வாக்கைக் காணோமாம், இந்த லட்சணத்தில் இந்த ஆராய்ச்சி வேறேயா!

* ஜி. ரவி காந்த், சைதாப்பேட்டை.

? ராமாயணத்தில் ராமராக ஹூஸ்மோகன் நடித்திருந்தால்...?

! அலகாபாத்தில் காங்கிரஸ் பிரசாரத்துக்குப் போய் ஜனங்களைப் புல்லரிக்கச் செய்திருப்பார்!

* சீர்காழி சாமா, தென்பாதி.

? சேலம் குண்டு, மாயவரம் பாதிரி, எது டாப்?

! இப்படிக்கேள்வியோடுநிறுத்திக்கொண்டால் எப்படி...? இதில் அரை டஜன் அதில் அரை டஜன் வாங்கித்தனித்தனிப்பார்சலாக கூரியர் சர்வீஸில் அனுப்பிவைத்தால்சுவைத்துப் பார்த்து டாப்பை நிர்ணயிக்கலாம்!

* பாரதி. பா. மு. தாசன், போடிநாயக்கனூர்.

? மாணவ மாணவியருக்குநிரந்தரச் சாதிச் சான்றிதழ் வழங்கத் தமிழக அரசு உத்தரவு பிறப்பித்துள்ளது பற்றி?

! சாதியை நிரந்தரமாக ஒழிக்க வேண்டிய அரசு சாதியை நிரந்தரப்படுத்த வழி வகுக்கிறது என்று குறை கூறலாமென்றாலும், லஞ்சத்தை அவ்வப்போது தந்து சான்றிதழ் பெற்று வந்ததால் இவ்விஷயத்தில் லஞ்சம் நிரந்தரமாகி வந்ததைத் தடுத்து, ஒரு தடவையோடு லஞ்சத்தை நிறுத்தி விட்டதற்காக வாழ்த்தவும் செய்யலாம்.

* இரா. செல்வபாண்டியன், புத்தாம்பூர்.

? 'ஜெயலலிதா ஆட்சிக்கு வந்தால் ஏறக்குறைய அது ஒரு சர்வாதிகார ஆட்சியாகத்தான் இருக்கும் என்று எழுதிய கல்கி ஒரு போணியாகாத ஏடு. கருணாநிதியிடமும் ஜானகியிடமும் கையூட்டு வாங்கிய ஏடு என்று பொன் மனம் வர்ணித்திருப்பது பற்றி...?

! அப்படி எழுதியிருந்தால் அது பொன் மனமல்ல; பித்தளை என்று நிரூபித்துக் கொண்டதாகும்.

* எம். வி. வேங்கடேசுவரன், மேல்பட்டி.

? பல கோடி ரூபாய் வருமானம் கிடைக்கப் போகிறது என்ற ஒரே காரணத்தினால் தமிழக அரசு குதிரைப் பந்தயத்தை மீண்டும் கொண்டு வந்து பல கோடி ஏழைகளின் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்ளப் போகிறதா?

! எம். ஜி. ஆர். அரசு கிண்டியில் குதிரைகள் ஓடுவதைத்தான் தடுத்துத் தடை விதித்ததேயொழிய அங்கே சூதாட்டம் தொடர்வதைத் தடுக்க முடியவில்லை. வெவ்வேறு ஊர்களில் நடக்கும் குதிரைப்பந்தயங்களுக்குக் கிண்டியில் மக்கள் பணம் கட்டித் தோற்றுக் கொண்டுதான் இருந்தார்கள். மூலைக்கு மூலை ஒயின் ஷாப் திறக்க அனுமதி வழங்கி விட்டு மதுவிலக்கை அமுல்படுத்துவதாகக் கூறுவது போல்தான் இதுவும். குதிரைப் பந்தய விஷயத்தில் அரசின் ஒரு போலித்தனத்துக்கு இப்போது முடிவு ஏற்பட்டிருக்கிறது. நான் மது — சூதாட்டத்தின் எதிரி; போலித்தனங்களின் எதிரியும்கூட.

* குரு. செல்வசிரோன்மணி, இலஞ்சி.

? குடும்பப் பொறுப்பைக் கணவன் மனைவி இருவரில் யார் ஏற்றால் இல்லறம் சிறக்கும்?

! கூட்டணியே அமோக வெற்றி பெறும். எத்தனை சதவீதம் வேலைகளைப் பகிர்ந்து கொள்வது என்பது பேசித் தீர்மானிக்கப் படவேண்டிய விஷயம்.

* மு. மதிவாணன், அரூர்.

? 'பிரதமர் பதவிக்குக் கூடத் தகுதியானவர் ஜெயலலிதா' என்று அரங்கநாயகம் கூறியிருப்பது பற்றி...?

! ஜெயலலிதா பிரதமர் பதவிக்குத் தகுதியானவர்தானா என்பதில் கருத்து வேறுபாட்டுக்கு இடமுண்டு. ஆனால் அரங்கநாயகம் ஜால் வைக்கும் பதவிக்கு முற்றிலும் தகுதியானவர் என்பதில் கருத்து மாறுபாட்டுக்கே இடமில்லை.

* சுபா ராஜேஸ்வரன், குளத்தூர்.

? 'தமிழ்நாட்டில் ராஜீவ் ஆட்சியை ஏற்படுத்துவோம் என்று கூறாமல் காமராஜ் ஆட்சியை ஏற்படுத்துவோம் என்று தலைவர் மூப்பனார் கூறுவது ஏன்?' என்று தி. மு. க. தலைவர் கேட்டிருப்பது பற்றி?

! தி. மு. க. வினரும் 'அண்ணா ஆட்சியைக் கொண்டு வருவோம்' என்றுதான் சொல்கிறார்களே தவிர, 'அன்றைய கருணாநிதி ஆட்சியைத் திரும்பக் கொண்டு வருவோம்' என்று சொல்வது கிடையாது — கவனியுங்கள்.

* ஆர். கே. அருள்செல்வன், விக்கிரபாண்டியம்.

? கலைஞர் ஏராள சினிமா விழாக்களில் கலந்து கொள்வது எதைக் காட்டுகிறது?

! எம். ஜி. ஆருக்குப் பயந்து கொண்டு சினிமா உலகில் இருந்த பலர் இனி கருணாநிதி முதல்வராகி விடலாம் என்ற முன்னெச்சரிக்கையுடன் செயல்படுவது ஒன்று. சினிமா மாயை இல்லாமல் இந்தியாவில் அரசியல் இல்லை என்பது இரண்டு.

* பூவண்ணன், திருமயம்.

? அகில உலக ஊழல் மன்னனான கருணாநிதிக்கு ஜால்ரா போடும் கல்கியாரைப் பற்றி மக்கள் பெரிதும் வருந்துவதைப் பற்றி வருத்தமே இல்லையா?

! நம்முடைய ஜால்ரா மிகப் பெரிது. அது சரியான காரியங்களை ஆமோதித்துப் பலமான ஓசை எழுப்பும். தவறான செயல்களைச் செய்யும் தலைவர் யாரானாலும் அவர் தலையே ஜால்ராக்களிடையே சிக்குவது மாதிரி ஓங்கித் தட்டிக் கேட்கும். இதைப் புரிந்து கொள்ளாத உங்களைப் போன்றவர்கள் பற்றித்தான் எனக்கு வருத்தம். கருணாநிதி ஆட்சியில் இருந்த போது அவரது பல செயல்களைக் கடுமையாக விமர்சிக்கக் கல்கி தயங்கியதே இல்லை.

* ஆர். ராஜா, சீர்காழி.

? 'கட்டுப்படுத்த முடியாத அளவுக்கு எம். ஜி. ஆர். ஆட்சியில் ஊழல் பெருகியது' என்று ஜெயலலிதா கூறியிருப்பதை எந்த அளவுக்கு நம்பலாம்?

## நீங்கள் கேட்டவை — தாரகை

! முழுமையாக.

* அ. ராணி, சென்னை — 75. *

? பங்களாதேஷை இஸ்லாமிய நாடாக அறிவித்தமைக்கு இஸ்லாமியரான ஷேக் ஹஸினா கடும் எதிர்ப்பு தெரிவித்திருப்பது பற்றி?

! சிறுபான்மையினர் மனம் வருந்தாமலும், அவர்களுக்கு அச்சமோ அதைரியமோ ஏற்படாத வகையிலும், அவர்கள் நலன் புறக்கணிக்கப்படாது என்ற நம்பிக்கை பிறக்கும் விதத்திலும் ஆட்சி நடத்துவதே சிறந்தது. அந்த முறையில் ஹஸினாவின் எதிர்ப்பு நியாயமானது; போற்றுதற்குரியது.

* நியாயமான எதிர்ப்பு.



* சிந்திக்க மாட்டாரா?



* ஊழல் மன்னர்!



* புல்லரிப்பு!



* ஜே. பழனி, சனுக்கை.

? நம் நாடு ஒரு பக்கம் வெள்ளத்தாலும் மறுபக்கம் வெயிலாலும் அவதிப்படும் வேளையில் வெளிநாட்டுப் பயணம் போயிருக்கும் ராஜீவ், இதைப் பற்றி ஒரு கணமும் சிந்திக்க மாட்டாரா?

! அயல்நாட்டுப் பயணம் போவதைத் தவறென்று சொல்ல முடியாது. அதற்கு அவசியம் இருக்கிறது. ஆனால் உள்நாட்டுப் பிரச்னைகள் பற்றி அவர் போதிய அளவு சிந்திக்கவில்லை. குறிப்பாக எல்லாரையும் பாதிக்கும் பிரச்னையான விலைவாசி உயர்வு. 86—87 ஆண்டைவிட 87—88—ஆம் ஆண்டில் பணவீக்கம் இரண்டு மடங்காகியுள்ளது. அதாவது 5.3 சதம் 10.4 சதமாகி விட்டது! இதைப் பற்றி அவர் கவலைப்படுவதாகவே காணோம். மக்கள்தான் விலைவாசி உயர்வைக் கண்டு கவலைப்படுவதுடன் கஷ்டப்பட்டுக்கொண்டும் இருக்கிறார்கள்.

* ரூ. 15 பரிசு பெறுபவர்:

அ. ராணி,
11, நேரு தெரு,
பம்மல், சென்னை — 75.






ஒரு வித்தியாசமான கதையைக் கொடுக்க வேண்டும் என்ற எண்ணத்துடன் செயல்பட்டிருப்பதற்காகவே டைரக்டரை முதலில் பாராட்டலாம்.

பிக்னிக்கிற்குப் போன இடத்தில் அந்த விபரீதம் நேரும் என்று யாருமே எதிர்பார்த்திருக்க முடியாது. விபரீதம் நடந்து விட்டது. பிக்னிக்கில் நடந்த அந்தக் கொலையால், பிக்னிக்கிற்குப் போன ஆசாமிகள் ஒவ்வொருவராய்ப் பிரதி மாதம் இருபத்தி நாலாம் தேதி கொல்லப்படுவது திகில் நிறைந்த சுவாரஸ்யம்.

எடுத்த எடுப்பில் அம்பிகாவை அந்த மழை நேரத்தில் ஒரு தாடிக்காரன் தேடி வருவதும் அம்பிகாவைப் பார்த்து மழைக்கு ஒதுங்க வந்தேன் என்பதும், கையைக் கீறி ரத்தம் வரவழைத்து ஓவியம் வரைந்து காட்டி, இவர்கள் முகத்தில்தான் சாவுக்களை இருக்கிறது என்று சொல்வதும் நல்ல திக் திக் தொடக்கம்.

ஓட்டப் பந்தய வீரர் நாஸர், வியர்வை சிந்தச் சிந்த ஓடி வந்து ரயில்வே ட்ராக்கில் விழுந்து, கை தனியாகத் துண்டிக்கப்பட்டு விழ, உடலில் ரயில் ஜிகு ஜிகு என்று ஏற — காட்சி படமாக்கப்பட்ட விதத்திற்கு ஒரு சபாஷ்!

அட, கல்யாண காலத்தில் அம்பிகா இந்தப் போடு போட்டுக் கொண்டிருக்கிறாரே! முகத்தில் திகிலைக் காட்டுவது, 'உன் கணவன் இறக்காமல் இருக்க வேண்டுமானால், நீயே ஐந்தாவது ஆசாமியைக் கொன்று விடு' என்ற ஜோசியரின் 'அறிவுரை'யை வேதவாக்காக நித்துக் கொண்டு கொலைகாரியாக மாறப் பார்ப்பது எல்லாமே ஜோர்தான். இனிமேல் இந்த அம்பிகாவைப் பார்க்க முடியுமோ என்னவோ!

வர வரச் செந்திலின் நகைச்சுவை படுத்த படுக்கையாகிக் கொண்டு வருகிறது. நல்லபடியாகத் தேறிப் பிழைத்து வர ஏதாவது பிரார்த்தனை கிளப்பிற்கு எழுதிப் போட்டு விட வேண்டியதுதான்!

சரத்பாபுவிற்குச் சும்மா பல்லைக் குத்திக் கொண்டு இருக்கிற மாதிரி ஒரு பாத்திரம். கொஞ்சம் கனமாகக் கொடுத்திருக்கலாம். மனிதர் பிய்த்து விளாசியிருப்பார். ஹூம்!

சந்திரசேகரும், நாசரும் டபிள் ஓ.கே.

மூன்று பாடல்கள். கேட்கும் போது நன்றாக இருந்த மாதிரி நினைவு.

இடைவேளை வரை படத்தில் நல்ல விறுவிறுப்பு.

இடைவேளைக்கப்புறம்தான்....

— ஜெயமன்மதன்

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.

முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 4 3154 3, 4 34 157: ஆசிரியர் குழு அலுவலகம்: 4 34 14 5.

ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 104 /—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 280/—; விமானத் தபால் ரூ. 680/—.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 52/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 14 0/—; விமானத் தபால் ரூ. 34 0/—.

பற்குழியினால் வலி ஏற்பட்டு, இந்த அரும்புப் புன்னகை கண்ணீர்ப் பெருக்காய் மாறிட அனுமதிக்காதீர்கள்.



இந்த சாக் டங்கள் பல் என வையுங்கள், மற்றும் இந்த வண்ணத் திரவம் கோல்கேட்டின் விசேட ஃப்ளோரைடு.



சாக்கை திரவத்தில் தோய்த்து இரண்டாக உடைத்திடுங்கள்



வண்ணத் திரவம் சாக்கில் ஊடுருவிச் சென்றுள்ளதைப் போல...



கோல்கேட்டின் விசேட ஃப்ளோரைடு பல் எனமலில் ஊடுருவி கிருமிகளிலிருந்தும் பற்குழிகளிலிருந்தும் பாதுகாக்கிறது மற்றும் பற்களை உறுதியாக்குகிறது.



இப்போதே, குழந்தைக்கு ஃப்ளோரைடு பற்றி எடுத்துக் கூறுங்கள்.

கோல்கேட் ஃப்ளோரிகார்டு, கிருமிகளிலிருந்தும் பற்குழிகளிலிருந்தும் உங்கள் குழந்தைக்கு ஒப்பற்றப் பாதுகாப்பு.

## ஒப்பற்ற ஃப்ளோரைடு பாதுகாப்பு



GISTERED No. M 4302
gistered as a Newspaper in Sri Lanka

# உங்களுக்குத் தெரியுமா?

கோகுல் பவுடர் தூய சந்தனமும், ஸ்டார்ச் கலவையும் இணைந்துள்ளதால் வியர்க்குருவை அகற்றுகிறது.
கோகுல் பவுடர் கோடையில் சருமத்தை மென்மையாக பாதுகாக்கிறது.

நாள் முழுவதும் கமழும் நறுமணக்கலவை தனித் தன்மை வாய்ந்தது. ஏனெனில் மிக உன்னதமான வாசனை திரவியங்கள் கொண்டு தயாரிக்கப்படுவது.

கோகுல் பவுடர் இனிமை !
தென்றல் போல் குளுமை !

**கோகுல் - தூய சந்தனத்தில் தயாரான ஒரே உன்னதப் பவுடர்.**

